# குங்குமப் பொட்டுகள் யாவும் ஒரே வகை அல்ல !

சிங்கார் நிச்சயமாக மேன்மையானது
• சன்னமாகவும், சமனமாகவும் அணிந்திடக் கூடியது • எழில் மிகுந்தது • வழிந்து பரவாது
• உலர்ந்ததும் கீறல் விழாது • கறை ஏற்படுத்தாது
• சுகாதார முறையில் தயாரித்தது.

குறிப்பிட்டுக்
கேட்பீர் எப்போதும்

**சிங்கார்**

முழுமை எழில் கொஞ்சும்.
இந்தியாவின்
உச்ச விற்பனையுள்ள
குங்குமப் பொட்டு.

பாரமௌண்ட் ப்ராடக்ட்ஸ்,
809, ப்ரஸாத் சேம்பர்ஸ்,
பம்பாய் 400 004.






ஸிங்தூர்

everest/638/SH Tam

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

ஏன்

## வெஸ்டெர்லி?

**கவர்ச்சி-**
அழகுமிகு அமைப்புடன்
நான்கு வித குளிர்ச்சிமிகு
வண்ணங்களில் கிடைக்கிறது.

**சிக்கனம்-**
தனித்தன்மை வாய்ந்த சோக்
ரெகுலேட்டர் மின்சாரச்செலவை
30% வரை மிச்சப்படுத்துகிறது.

**சிறப்பு-**
அதிக அளவு காற்றை அளிப்பதுடன்
சப்தமின்றியும் சுழல்கிறது.

சிறந்ததை நாடுங்கள்—
வெஸ்டெர்லியை
வாங்குங்கள்

## வெஸ்டெர்லி

சீலிங் ஃபேன்களில் சிறந்தது

---

வடசென்னை வாசிகளுக்கு
ஒரு வரவேற்புச் செய்தி

## Spencer's

தன் சில்லறை மருந்து விற்பனையை
362A, என். எஸ். ஸி. போஸ் ரோட்டில் அறிமுகப்படுத்துகிறது. இது
குழந்தைகளுக்கான பெல்ஜிய போலியோட்ராப்கள், ஸ்பென்ஸர் கம்பெனி வைத்திய அதிகாரியின் மேற்பார்வையில் செயல்படும்.

பொது மக்கள் இந்த வசதியைப் பயன் படுத்திக் கொள்ள
வேண்டுகிறோம்.

**வேலை நேரம்: காலை 9 மணி முதல் 12 வரை எல்லா நாட்களிலும் ஞாயிற்றுக்கிழமைகள் தவிர**

**ஸ்பென்ஸர் & கோ லிட்**
769, அண்ணாசாலை
சென்னை 600002

---



கூந்தல் வளர்ச்சிக்கு சிறந்தது!

## நீலிபிருங்காதி தைலம்

ஆனந்தா வைத்தியசாலை
பழனி தமிழ்நாடு
கிளை: 69, கச்சேரி ரோடு, மைலாப்பூர், சென்னை-4
சுபேதார் சத்திரம் ரோடு, பெங்களூர்-2

ANNA

# Kalki Shopping Page




# சிண்டிகேட் பாங்க்

உங்களது துளிர்விடும் நம்பிக்கைகள்
செயல்வடிவம் பெற
எங்களின் பல்வேறு திட்டங்கள்
உதவுகின்றன.

உங்கள் குழந்தைகளின்
எதிர்காலத்தை ஒளிமயமாக்க
வல்லது சிண்டிகேட் பாங்க்.

உங்கள் தேவைகளை நிறைவேற்ற
பல திட்டங்களை வகுத்து
செவ்வனே பணியாற்றி வருகிறது
சிண்டிகேட் பாங்க்

இன்றே சிண்டிகேட் பாங்க்கை
அணுகுங்கள், நலமடையுங்கள்.

நம்பிக்கை, நட்புறவு இவற்றின்
சின்னம் சிண்டிகேட் பாங்க்.

சிண்டிகேட் பாங்கில் சேமிப்பீர்—
செழிப்படைவீர்.



**குழந்தைகள் நல**
**சேமிப்புத் திட்டம்**
ரூ.100ம் அதன் மடங்குகளிலும்
கிடைக்கும்.
உதாரணமாக:
ரூ. 1000 பத்திரம்
39 மாதங்களில்
ரூ. 1273.50 ஆகவும்
63 மாதங்களில்
ரூ. 1596.00 ஆகவும்
பெருகுகிறது.



## சிண்டிகேட் பாங்க்

உங்கள் குழந்தைகளின் எதிர்காலம் வளம் பெற
உற்ற நண்பன்

maa SB 64 TAM

## மறு தேர்தல்

**(22-8-79 தேதியன்று திரு வாஜ்பாய் டெல்லியிலிருந்து சென்னை வந்தார். திரு ஜெகஜீவன்ராம் தலைமையில் ஜனதா அரசு அமைக்க ஆதரவு பெறுவதற்காக எம். ஜி. ஆர். அவர்களைச் சந்திக்க எண்ணியே வந்தார். திடீரென பாராளுமன்றம் கலைக்கப்பட்டு இடைத்தேர்தல் நடத்துவதற்கான ஜனாதிபதி அறிக்கை பற்றித் தெரிய வந்தது. வாஜ்பாய் டெல்லி திரும்பி விட்டார்.**

**அன்று மாலை தமிழ்நாடு ஜனதா கட்சி பொது காரியதரிசியும் தேசிய செயற்குழு உறுப்பினருமான திரு ஜனா கிருஷ்ணமூர்த்தியைச் சந்தித்துச் சில கேள்விகளைக் கேட்டபோது:)**

கேள்வி: திரு ஜெகஜீவன் ராம் தலைமையிலான ஜனதா அரசு அமைக்கும் பணியில் எம். ஜி. ஆரின் ஆதரவைப் பெறுவதற்காக திரு வாஜ்பாய் சென்னைக்கு வந்தார். ஆனால் ஜனாதிபதி பாராளு மன்றக் கலைப்பை அறிவித்துள்ளார். ஜனாதிபதி திரு ஜெகஜீவன் ராமுக்கு அரசு அமைக்க வாய்ப்பு அளிப்பார் என்று ஜனதா கட்சி எப்படித் தானாக முடிவுக்கு வந்து செயல்பட்டது?

திரு ஜனா கிருஷ்ணமூர்த்தி: தான் உடனடியாக முடிவெடுக்கப் போவதில்லை என்று மதியம் 11.30 மணி அளவில் கூட ஜனாதிபதி உறுதி அளித்ததாக டெல்லியிலிருந்து தகவல் வந்தது. ஆனால் திடீரென்று பகல் 12 மணிக்கு ஜனாதிபதி பாராளுமன்ற கலைப்பை அறிவித்துள்ளார். பாராளுமன்றத்தைக் கலைப்பதாகவே அவர் முடிவு செய்திருந்தாலும், இம்முடிவை ரகசியமாகப் பாதுகாக்காமல் உடனடியாக அவர் அறிவித்திருந்தால் குழப்பத்துக்கு இடமில்லாது இருந்திருக்கும்.

கேள்வி: ஜனாதிபதி ஜனதா கட்சியை மறுபடியும் அழைத்து அரசு அமைக்க வாய்ப்பளிக்கவேண்டும் என்று உங்கள் கட்சி கோருவது எந்த விதத்தில் நியாயமானது?

திரு கிருஷ்ணமூர்த்தி: திரு மொரார்ஜி அரசு ராஜினாமா செய்ததும், ஜனாதிபதி எதிர்க்கட்சித் தலைவர் என்ற முறையில் திரு சவானை அரசமைக்க அழைத்தார். அவரால் அரசமைக்க இயலவில்லை. இந்நிலையில் ஜனாதிபதி ஜனதாக் கட்சியை மட்டுமோ அல்லது சரண்சிங் தலைமையிலான ஜனதா(எஸ்) கட்சியை மட்டுமோ அரசு அமைக்க முயற்சி செய்ய அழைப்பு விடுத்திருக்க வேண்டும். இரண்டு கட்சிகளையும் ஒரே சமயத்தில் அழைத்தது சரியல்ல.

திரு சரண் சிங்கை ஆட்சி அமைக்க ஜனாதிபதி அழைத்த போதே அக்கட்சிக்குப் பெரும்பான்மை ஆதரவு கிடையாது.

பெரும்பான்மை ஆதரவில்லாத கட்சித் தலைவரைப் பிரதமராக்கி நாலு வாரம் அவகாசம் கொடுத்து 'எப்படியாவது பெரும்பான்மை பலத்தைப் பெற்றுக் காட்டு' என்பது போல் ஜனாதிபதி அனுமதி அளிப்பது ஜனநாயக மரபுக்கு ஏற்ற செயல் அல்ல. இதனால் 'Horse Trading' என்பது போன்ற கண்ணியமற்ற செயல்களுக்கு ஜனாதிபதியே வழி வகுப்பது போலாகியது. கடைசியில் பாராளுமன்றத்தைச் சந்திக்காமலே சரண் சிங் ராஜினாமா செய்து விட்டார். இந்நிலையில் பாராளுமன்றத்தில் எதிர்க்கட்சித் தலைவராக



# திகைப்பில் ஆழ்த்திய திடீர் முடிவு!

5



## சிரிப்பு!

''மனம் ஒரு கண்ணாடி. கவலை அதில் படியும் அழுக்கு. சிரிப்பு அந்த அழுக்கைப் போக்கும் திரவம்.''—''ஜாமி.''

''சிரிப்பைப்போல் சுவையானது மில்லை சிரிப்பைப் போல் சுலபமானது மில்லை.''

—''பான்''

''சிரித்துக்கொண்டு அறைக்குள் நுழையும் மனிதரைக் கண்டால் மற்றொரு விளக்கும் அந்த அறையில் எரிவது போல பிரகாசிக்கும்.'' -தொகுப்பு: கோ. தீபா

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

அங்கீகரிக்கப்பட்டுள்ள திரு ஜகஜீவன்ராம் அவர்களை அரசு அமைக்க முயற்சி செய்யுமாறு அழைப்பதுதானே முறையான செயல்!

**கேள்வி:** இம்மாதிரி மாறி மாறி ஒவ்வொரு கட்சியாக அரசு அமைக்க முயற்சி செய்யும்படி எத்தனை தடவைதான் ஜனாதிபதி கேட்டுக்கொண்டிருக்க முடியும்? நாட்டு நிர்வாகத்தில் ஸ்திரமற்ற நிலைதானே இருக்கும்? ஏதாவது ஒரு குறிப்பிட்ட தருணத்தில் ஜனாதிபதி நிலைமையைச் சரிப்படுத்த முடிவெடுக்கத்தானே வேண்டும்?

திரு கிருஷ்ணமூர்த்தி: யார் வேண்டாம் என்கிறார்கள்? ஜனதா கட்சிக்கு இரண்டு நாட்கள் அவகாசம் கொடுங்கள், எங்களுக்கு ஆதரவு அளிக்கும் ஒவ்வொரு பாராளுமன்ற உறுப்பினரிடமிருந்தும் தனிப்பட்ட கடிதம் வாங்கி எங்களுக்குள்ள ஆதரவை நிரூபிக்கிறோம். அதற்கான அவகாசம் அளித்து ஆட்சி அமைக்க அழையுங்கள் என்று தானே ஜனாதிபதியிடம் விண்ணப்பித்தோம். அதற்கு அவர் செவி சாய்ப்பது போல் காண்பித்து விட்டுத் திடீரெனப் பாராளுமன்றத்தைக் கலைத்து விட்டாரே!

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

**15 17 22 28 30**

'மூலதனம்' நூலை எழுதி முடிக்க காரல் மார்க்ஸிற்கு 15 ஆண்டுகள்.

'வெல்த் ஆப் நேஷன்' என்ற நூலை எழுத ஆடம் ஸ்மித்திற்கு 17 ஆண்டுகள்.

பரிணாமத் தத்துவத்தைக் கண்டு பிடிக்க சார்லஸ் டார்வினுக்கு 22 ஆண்டுகள்.

'ஸ்ட்ரெப்டோமைசின்' மருந்தைக் கண்டு பிடிக்க செல்மான் வாக்ஸ்மனுக்கு 28 ஆண்டுகள்.

தொடர் நிலைக் கோட்பாட்டைக் கண்டு பிடிக்க ஐன்ஸ்டீனுக்கு 30 ஆண்டுகள்.

சிங்கம்புணரி-சே. ஆதிரை.

**கேள்வி:** இன்றையச் சூழ்நிலைக்கு அடிப்படைக் காரணமான ஜனதா பிளவு பற்றிச் சில விளக்கங்கள் தேவை. ஜனதாவின் அங்கமான முன்னாளைய ஜனசங்க அங்கத்தினர்களும் தலைவர்களும், மதச் சார்புள்ள இயக்கமான ஆர். எஸ். எஸ். ஸில் அங்கத்தினர்களாக இருப்பதால்தான் தாங்கள் ஜனதாவை விட்டு வெளியேறிவிட்டோம் என்று சரண் சிங் ஆதரவாளர்கள் கூறுவது பற்றித் தங்கள் விளக்கம் என்ன?

திரு கிருஷ்ணமூர்த்தி: நெருக்கடி காலத்தின் போது, சிறையில் இருந்த காங்கிரஸ் (O), பாரதிய லோக் தல் (BLD) ஜனசங்கம், சோஷலிஸ்ட் கட்சி ஆகிய கட்சிகளின் தலைவர்கள் ஒன்று கூடி இந்திரா காந்தியின் அடக்குமுறையை முறியடிக்க உருவாக்கியது ஜனதா. அந்த நிலையிலேயே இந்த நான்கு கட்சிகளுக்கும் மற்ற கட்சிகளின் கொள்கைகள், நடைமுறைகள் பற்றி நன்றாகத் தெரியும். இப்போது திடீரென்று முன்னாளைய ஜனசங்கத் தலைவர்கள் '..தசார்பான இயக்கத்துடன் தொடர்பு கொண்டுள்ளதால் ஜனதாவை விட்டு வெளியேறினோம்' என்று சரண் சிங்கும், அவரது ஆதரவாளர்களும் கூறுவது போலித்தனமான காரணம். உண்மையான காரணம் சரண்சிங் தாமே பிரதமராக வேண்டும் என்று ஆசைப்பட்டார். ஆனால் ஜனதாவில் பலம் வாய்ந்த அங்கமாக இருந்த முன்னாளைய ஜனசங்க அங்கத்தினர்கள் திரு மொரார்ஜி தேசாய் பிரதமராக இருந்தால்தான் மத்தியஆட்சியின் ஸ்திரத்தன்மைபாதிக்கப்படாமல் இருக்கும் என்று கருதி அவரை ஆதரித்தனர். இதனால் ஜனசங்கத்தின் மீது குற்றம் சுமத்தி சரண்சிங் குழுவினர் வெளியேறி விட்டார்கள். ஜனதா உடைந்தது சரண்சிங்கின் பதவி மோகத்தால்தான்!

**கேள்வி:** முன்னாளைய ஜனசங்க அங்கத்தினர்கள் ஆர். எஸ். எஸ். போன்ற மதசார்புள்ள இயக்கத்துடன் தொடர்பு கொண்டுள்ளது எவ்விதத்தில் நாட்டுக்கு நன்மை பயக்கும்?

திரு கிருஷ்ணமூர்த்தி: ஆர். எஸ். எஸ். மதசார்புள்ள இயக்கம் என்பதையே நான் மறுக்கிறேன். 'ஹிந்து ராஜ்யத்தை உருவாக்க ஆர். எஸ். எஸ். செயல்படுகிறது. இதனால் கிறிஸ்தவர்கள், முஸ்லிம்கள் போன்ற சிறுபான்மை சமூகத்தினர் புறக்கணிக்கப்படுவர்' என்பது மற்றைய கட்சிகளின் பொய்ப் பிரசாரம். ஆர்.எஸ்.எஸ். கொள்கை மதசார்பற்ற அரசு அமைத்து, எல்லா மதத்தினருக்கும் சம மதிப்பு அளிக்க வேண்டும் என்பதுதான். சமீபத்தில் ஜனதா கட்சியின் விதியமைப்பில் திருத்தம் செய்துள்ளோம். 'மதச்சார்பு அரசு அமைப்பதில் நம்பிக்கையுள்ள எந்த ஸ்தாபனத்தைச் சார்ந்தவர்களும் ஜனதாவில் உறுப்பினராக இருக்க முடியாது' என்று. நிலைமை இப்படியிருக்க பதவி மோகம் கொண்டவர்கள் செய்யும் பொய்ப் பிரச்சாரத்திற்கு அடிபணிந்து முன்னாளைய ஜனசங்க அங்கத்தினர்களை ஆர். எஸ். எஸ். ஸிலிருந்து

விலகச் சொல்வது எவ்விதத்திலும் சரியானதாகப்படவில்லை.

**கேள்வி: தமிழ் நாடு மாநில ஜனதா கட்சி, லஞ்ச ஊழல் குற்றம் சாட்டப்பட்டு நீக்கப்பட்ட தி. மு. க.வுடன் இணைந்து செயல்படுவது எவ்விதத்தில் சரியானதாகும்?**

கிருஷ்ணமூர்த்தி: திருமதி இந்திரா காந்தி தலைமையிலான யதேச்சாதிகார ஆட்சியை முறியடிக்க ஜனதா முயன்ற போது தி.மு.க.வும் அதே கொள்கையைக் கொண்டு செயல் பட்டதால் இருவரும் கூட்டாகத் தேர்தலில் நின்றோம். பிறகு நடந்த மாநில சட்டசபைத் தேர்தல்களிலும், மதுரை மாநகராட்சித் தேர்தல்களிலும் தனித்துத் தானே நின்று போட்டியிட்டோம். தஞ்சை இடைத் தேர்தலில் இந்திரா காந்தி நிற்பதாக இருந்ததால் கூட்டாகப் போட்டியிட முடிவு செய்து செயல் பட்டோம்.

**கேள்வி: ஜனதா ஒரு தேசியக் கட்சி. அது ஒரு மாநிலக் கட்சியின் பின்னால் போனால் தன்னை எவ்வாறு இம்மாநிலத்தில் வளர்த்துக் கொள்ள முடியும்?**

கிருஷ்ணமூர்த்தி: அம்மாதிரி மாநில கட்சியின் பின்னால் நாங்கள் போகாதபோதுதங்கள் கூற்று எவ்விதத்தில் சரியானது என்று எனக்குப்படவில்லை.

**கேள்வி: மாநில அளவிலும் எவ்விதப் பூசலும் இல்லாமல் ஒற்றுமையாக இருந்தால் தானே உங்கள் கட்சி வளர முடியும்? குமரி அனந்தன் வெளியேறும் சூழ்நிலை உண்டாகி கட்சி உடைபட்டுக் கிடக்கிறதே!**

கிருஷ்ணமூர்த்தி: மாநில ஜனதா கட்சித் தலைவர் பதவிக்குத் திரு குமரி அனந்தன் ஆசைப்பட்டார். ஆனால் திரு எஸ். வி. லக்ஷ்மணன் அப்பதவிக்கு வருவதற்குத்தான் அதிக ஆதரவு இருந்தது. தமக்கு அப்பதவி கிடைக்காததால் திரு குமரி அனந்தன் மட்டுமே வெளியேறினார். இதனால் மாநில ஜனதா கட்சி உடை பட்டுள்ளது என்பது சரியான தகவல் அல்ல.

**கேள்வி: வரப்போகும் பாராளு மன்ற மறு தேர்தலில் ஜனதா மறுபடியும் தி. மு. க. வுடன் கூட்டாகப் போட்டியிடுமா?**

கிருஷ்ணமூர்த்தி: அதை இப்போதே எப்படி கூற முடியும்? மற்றக் கட்சிகளின் தன்மை அடிப்படையில் ஜனதா கட்சியின் தலைமை நிர்வாகம் சரியான காலக்கட்டத்தில் நல்ல முடிவெடுக்கும்.

பேட்டி: நாயகன்
புகைப்படம்: எஸ். ராமன்




விந்தை கள்விஞ் ஞான வார்ப்புக்கள்;
  வியத்தகு சாத னங்கள்;
முந்தை யர்கண்ட ஊருணி வாயில்
  முழுகியே போன தெல்லாம்
முந்தியே எடுக்க பாதாள கரண்டி;
  முழுவது மாய்நீல கடலில்,
சந்திரனில் உள்ள வற்றைக் காண
  சாதுவத கருவி யெல்லாம்

கண்ட பெரும்விஞ் ஞானி களே! அக்
  கதிரவனுக் குங்கல மனுப்பும்
கொண்ட பெரும தியின்சிக ரங்களே
  காணு வீர்ஒரு கருவி
கெண்டை விழிகள் ஓட்டிக் காட்டும்
  குலவி டுமவள் உள்ள
மண்ட லத்தைக் கண்டறிய ஓர்கருவி
  காணுவீர் விஞ்ஞானி காள்,



கல்கி

1979 செப்டம்பர் 2

சித்தார்த்தி ஆவணி 17

மலர்: 38 இதழ்: 5



தமிழ்த்திரு நாட்டை தன்னைப் பெற்ற எங்கள் தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

# நாடகம் நடந்தது, நாநிலம் சிரித்தது!

அதர்மத்தில் தோன்றிய ஆட்சி வீழ்ந்தது. அதற்காக மகிழ்கிறோம்.

வீழ்ச்சி அடையும்போதும் கௌரவத்தைக் கடைப்பிடிக்காமல் அதர்மப் பாதையிலேயே சென்றதற்காக சரண் சிங்கைக் கண்டிக்கிறோம்.

நம்பிக்கைப் பிரேரணையை எதிர்கொண்டு போர்க்களத்தில் நின்று தோல்வியை ஒப்புக் கொண்டிருந்தால் கண்ணியமாக இருந்திருக்கும். ஆனால் முதல் நாள் மாலை வரை மார் தட்டிய சரண் சிங் மறு நாள் நாடாளு மன்றம் பக்கம் எட்டிப் பார்க்கவே யில்லை. பதுங்கிக் கொண்டார்! வெட்கம்! வெட்கம்!

அமைச்சரவையின் ராஜிநாமாவைச் சமர்ப்பித்ததுடன் நில்லாது நாடாளு மன்றத்தைக் கலைக்குமாறு அவர் சிபாரிசு செய்ததைக் குள்ள நரித்தனமான காரியம் என்று விமர்சிக்கிறோம். சிறுபான்மை நாடாளு மன்ற அங்கத்தினர்களின் ஆதரவுடன் கள்ளத்தனமாகப் பதவிக்கு வந்தவர், குடியரசுத் தலைவரின் கட்டளைப்படி நம்பிக்கைப் பிரேரணையை எதிர்கொண்டு பிரதமராகும் தகுதியை நிருபிக்காதவர் நாடாளு மன்றத்தைக் கலைக்குமாறு சிபாரிசு செய்ய எப்படி உரிமை பெற்றவராவார் என வினவுகிறோம்.

'கஞ்சி வரதப்பா' என்றதும் 'எங்கே வரதப்பா' என்பது போல் பதவிப் பித்துப் பிடித்துப் பதறி ஓடி அமைச்சர்களாகப் பிரமாணம் எடுத்துக்கொண்ட காங்கிரஸ் தலைவர்கள் முக்காடிட்டுக் கொள்ளட்டும். சவான், சி. எஸ்., பை, கரன் சிங், பிரம்மானந்த ரெட்டி போன்ற எல்லோரும் சேர்ந்து தொன்மையான காங்கிரஸ் கட்சிக்கு எளிதில் துடைத்துவிட முடியாத கறையை ஏற்படுத்தித் தந்தார்கள். இதற்குப் பிராயச்சித்தமாக அவர்கள் இனி தேர்தலுக்கு நிற்பதில்லை என்றும் அடுத்த தலைமுறைக்கு வழி விடுவதாகவும் அறிவிக்கட்டும்!

மொரார்ஜியை ஆதரிப்பதாகக் கூறி, அந்த வார்த்தைகள் அச்சான மை நாளிதழ்களில் உலர்வதற்கு முன்பு சரண் சிங்குக்கு ஆதரவு என்று கூறிய தமிழக முதல்வர் இப்போதேனும் தமது போக்குக் குறித்து விசனிக்கட்டும். ஸ்திரத் தன்மைக்கு ஆதரவு என்று பூசி மெழுகி, குறைந்த பட்சத் திட்டம் என்று ஒரு மாயையைத் தோற்றுவித்துக் கொண்டு சரண்சிங் அமைச்சரவையில் பதவி ஏற்க ஓட்டமாக ஓடிய அ. இ. அ. தி. மு. க. பாடம் கற்றதாக ஒப்புக்கொள்ளட்டும்.

தாற்காலிக லாபங்களுக்காக நிரந்தர தர்மங்களை விட்டுக் கொடுப்பவர்கள் கதியெல்லாம் இதுதான். லட்சியம் எவ்வளவு முக்கியமோ அவ்வளவுக்கு அதை அடையும் மார்க்கமும் முக்கியம் என்ற அண்ணாவின் வாக்கை மறந்தவர்கள் நிலைமை இப்படித்தான் ஆகும். இருபத்தி நாலு மணி நேரம் கூட முழுசாக நீடிக்காத பதவிகளுக்காக எவ்வளவு பெரிய அபகீர்த்திகளைச் சம்பாதித்துக் கொண்டார்கள்! பரிதாபம்.

ராஜிநாமாவை யொட்டிச் சரண் சிங் விடுத்துள்ள அறிக்கையை நாம் நிராகரிக்கிறோம். இந்திரா காந்தியின் இஷ்டப்படி தாம் ஆட வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படும், அதற்கு இடம் தரக் கூடாது, அதை மக்கள் விரும்ப மாட்டார்கள் என்பதால் ராஜிநாமா செய்தாராம்! காதிலே பூவைக்கப் பார்க்கிறார். இந்திராவின் ஆதரவைக் கோரிப் பெற்றுப் பதவிக்கு வரத்துடித்த அவர், வேறு என்ன எதிர்பார்த்தாராம்? இந்திரா இவரிடம் கைகட்டி நிற்பார் என்றா? இந்திரா சொற்படி கேட்கும் நிர்ப்பந்தம் தமக்கு ஏற்படும் என்னு மளவுக்குக்கூடத் தீர்க்க தரிசனம் இல்லாதவர் பிரதமர் பதவியில் அமர எப்படித் தகுதி பெற்றவராவார்?

நாடாளுமன்றத்தைக் கலைக்க வேண்டும் என்ற சரண்சிங் சிபாரிசைக் குடியரசுத் தலைவர் சிரமேற்கொள்ள அவசியம் இல்லை. இதனை சாக்ளா, பால்கிவாலா

போன்ற அரிய பெரிய அரசியல் சாசன நிபுணர்கள் எடுத்துக் காட்டி விட்டனர். மாஜி சுப்ரீம் கோர்ட் நீதிபதிகள் எடுத்துக் கூறி விட்டனர். அம்பேத்கரின் கருத்துக்கள் கூட எடுத்துரைக்கப்பட்டன. எப்போது சரண் சிங் நம்பிக்கை வோட்டுப் பெறவில்லையோ அப்போது அவரைப் பிரதமராகவே கருத அவசியமில்லை, அவரது சிபாரிசு குடியரசுத் தலைவரைக் கட்டுப்படுத்தாது என்று விளக்கி யாகிவிட்டது.

ஆயினும் குடியரசுத் தலைவர் எல்லோரையும் கலந்தாலோசிப்பது போல் பாவனை செய்துவிட்டு, சரண் சிங்கின் யோசனையையே ஏற்றிருக்கிறார். இதற்கு மணிக் கணக்கில் பால்கிவாலாவுடன் கலந்தாலோசிப்பானேன்? ஜகஜீவன்ராமிடமும் சந்திரசேகரிடமும் தாம் அவசரப்படவில்லை என்று உறுதியளிப்பானேன்? குடியரசுத் தலைவரின் விருப்பப்படி தமது ஆதரவாளர்களின் பட்டியலை ஜகஜீவன்ராம் தயாரித்துக் கொண்டிருக்கும்போதே அவசரம் அவசரமாகச் சஞ்சீவ ரெட்டி நாடாளுமன்றத்தைக் கலைத்து உத்தரவிடுவானேன்?

குடியரசுத் தலைவர் பதவி விமர்சனங்களுக்கு அப்பாற்பட்டதாக இருக்கவேண்டும் என்பது மரபு எனில் என்ன பொருள்? அந்த விதமாக நடுநிலையுடன் குடியரசுத் தலைவர் நடந்து கொள்ள வேண்டும் என்பது தான். சஞ்சீவ ரெட்டி ஏமாற்றமளித்து விட்டார்.

ஜகஜீவன்ராமினால் பெரும்பான்மை பலமுடைய அரசு ஏற்படுத்த முடியாது என அவர் எண்ணினால், அதற்கு முன் அவர் அமைச்சரவை அமைக்குமாறு அழைத்த சவானும் சரண் சிங்கும் எப்படி அவர் நம்பிக்கையைப் பூர்த்தி செய்ய முடியும் என எதிர்பார்த்தார்? அவர்களுக்குக் காட்டிய சலுகையை இவருக்குக் காட்டியிருக்கக் கூடாதா? ஜனதாவுக்கு முன்பே ஒரு வாய்ப்புத் தந்தாகி விட்டது என்பது சரியான வாதமாகாது. அன்றைய ஜனதா நாடாளுமன்றத் தலைவர் மொரார்ஜி. இன்று ஜகஜீவன்ராம். உள்ளதற்குள் மிகப் பெரிய பெரும்பான்மை பலம் பெற்ற கட்சியான ஜனதாவின் இன்றைய தலைவர் ஒரு ஹரிஜனும் கூட. ஒரு ஹரிஜனை, பழுத்த அனுபவமுள்ளவரைப் பிரதமராகப் பெற்றோம் என்ற ஊக்கத்திலேயே பலபேரும் ஒத்துழைப்பை நல்கி நாட்டை ஓர் இக்கட்டான நிலையிலிருந்து மீட்டிருப்பார்கள்.

மறு தேர்தல் நடந்தால் நாடாளுமன்றத்தில் கட்சிகளின் நிலைமை எந்த அளவுக்கு அபிவிருத்தி அடைந்துவிடப் போகிறது? தேர்தல்களால் வினையும் மதமாச்சரியங்களையும் ஜாதிப் பூசல்களையும் பகை உணர்வுகளையும் நாம் அடிக்கடி சந்தித்துத்தான் ஆக வேண்டுமா? அடிக்கடி தேர்தல்கள் நடப்பதால் ஏற்படும் கோடிக்கணக்கான ரூபாய் செலவை (77ல் 16 கோடி. இன்று 20 கோடிக்குக் குறையாது) யார் தரப்போகிறார்கள்? சஞ்சீவ ரெட்டியா? வரிப் பணமாக ஏழை இந்தியன்தானே கொடுத்து அழ வேண்டும்?

முன்கூட்டியே திட்டமிட்டதை நிறைவேற்ற நாடகமாடிவிட்டார் சஞ்சீவ ரெட்டி. நாநிலம் சிரிக்கிறது நமது நாட்டைப் பார்த்து!

---

## தர்மசங்கடம்

தம்பு!







## லக்ஷ்மி

**முன் கதை**

திருநல்லூர் கிராமத்துக்கு மின் வசதி வந்து விட்டதை ராஜ்குமார் நன்கு பயன்படுத்திக் கோட்டை போன்ற தன் பாட்டன் காலத்து வீட்டில் சகல வசதிகளும் செய்திருந்தான். அவன் அருமை மனைவி அகல்யா அந்த வீட்டிக்கு வந்து ஆறு மாதங்கள்தான் அருமைக் கணவனுடன் ஆனந்த வாழ்க்கை நடத்தினள். அதன்பிறகு அவன் பொருள் சேர்க்கத்தூர தேசம் போய் விட்டான், இளம் மனைவி அகல்யாவையும் கண்பார்வை மங்கிப்போன தாயாரையும் தனியே அந்தக் கிராமத்தில் விட்டுவிட்டு. காவிரிக்கரையோர முள்ள அந்தக் கிராமத்துமாரியம்மன் சக்தியுள்ளவள். கணவனிருக்கும் போது காவிரியில் அவன் துணையுடன் குளிக்கப்போவாள் அகல்யா. இப்போதோ காவிரிநீர் குழாயில் வந்து கொட்டுகிறது வீட்டில். கணவனும் அருகில் இல்லை. ஆனால் மாரியம்மன் கோவிலுக்குத் தோட்டக்காரன் சிங்காரத்தின் துணையுடன் போய்க் கொண்டிருக்கிறாள் இந்த ஒன்றரை வருஷமாக. ஊரார் அகல்யாவின் பொறுப்பையும், பண்பையும், அழகையும் பாராட்டினர். வீட்டு நிர்வாகம் முழுதும் அவள்தான் அடிக்கடி கணவனின் நினைவில், அவன் அன்போடு அனுப்பிய பரிசுப்புடவை மின் ஸ்பரிசத்தில் அவனுடன் அனுபவித்த இன்பக் கிறக்கத்தில்தன்னைமறந்து போவாள் அகல்யா. அப்படி ஒரு தடவை கணவன் நினைவு மயமாகிப் போயிருக்கும் கால் மாமியாரின் குரல் ''அகல்யா!'' 'என்று அழைத்தது. ராஜாகிட்டேயிருந்து கடிதாசி வந்து எத்தினி நாளா குது?'' என்றுகேட்டாள். ''ஒரு மாசத்துக்கு மேலே ஆகிறது.''என்றுள் அகல்யா. தாய்க்குப்பிள்ளையைப் பிரிந்த தவிப்பு. தாரத்துக்கு ஆசைக் கணவனைப் பிரிந்திருக்கும் தாபம். இனி மேலே படியுங்கள்.

## 2

சிறிது பொழுதில் தெருவில் புழுதியைப் பரப்பிக் கொண்டு ஒரு கார் வந்து நிற்பதை நடையில் நின்றபடியே அகல்யா கவனித்து விட்டாள்.

மாமியார் பஞ்சரத்தினத்துக்கு எப்பொழுதுமே காது கூர்மை அதிகம். அதுவும் கண் பார்வை மங்கத் தொடங்கியதிலிருந்து அது இரட்டிப்பாகி விட்டிருந்தது.

''வாசல்ல என்ன சத்தம்? யார்னு பார்?'' மருமகளை அதட்டினுள். சேலத்திலிருந்து அவர்களது தூர உறவுக்காரி பார்வதி வந்திருந்தாள். அவளது கணவனுக்கு அங்கே பெரிய அளவில் சாய வியாபாரம். பங்களா— கார் — என்று தனது மூன்று பிள்ளைகள் அவர்களது மனைவிகள் — வீடு கொள்ளாட்டில் பேரப்பிள்ளைகள் என அவள் 'ஓகோ' என்று வாழ்ந்து கொண்டிருப்பவள். நான்கு மாதத்திற்கொரு தடவையாவது தங்கள் வீட்டு அம்பாஸிடரில் பேரப் பிள்ளைகளை வாரிப் போட்டுக் கொண்டு அருள்மிகு முத்துமாரியம்மனைத் தரிசிக்க அவள் சேலத்திலிருந்து வந்து விடுவது வழக்கம்.

வருகிறவள் பஞ்சரத்தினத்துக்குச் சாப்பிட முறுக்கு, மைசூர்பாகு என்று எதையாவது கட்டிக் கொண்டு வருவதுடன் கூட ஒரு மூட்டை ஊர் வம்பையும் எடுத்து வருவாள்.

அரை மணிக்கு மேல் அவளால் இருக்க முடியாது. கோவிலில் அர்ச்சனை, ஆராதனைகளை முடித்துக் கொண்டதுமே அன்னி பஞ்சரத்தினத்தைப் பார்த்துப் பேசிவிட்டு உடனடியாக ஊருக்குத் திரும்பிட விட வேண்டும். மொட்டையடித்துக் காது குத்தியிருந்த தன் கடைக்குட்டிப் பேரனை இடுப்பில் சுமந்து கொண்டு பெரியவனின் இளைய மகளைக்கையில் பிடித்துக் கொண்டு அவள் காரிலிருந்து இறங்கினுள். வீட்டு முன் படிகள் மீது ஏறி வராந்தாவிற்குள் வருவதற்குள் அவளுக்கு மூச்சு வாங்கியது.

''குழந்தையைக் கொடுங்க நான் தூக்கிக்கறேன்!'' ஓடிச் சென்று அவளிடமிருந்த மொட்டைப் பையனை வாங்கித் தன் இடுப்பில் வைத்துக் கொண்டாள் அகல்யா.

வந்தவள் அவளை ஏறஇறங்கப்பார்த்தாள். ''ம்! எப்ப இந்த வீட்டில் இப்படி ஒரு சின்னப் பையன் விளையாடப் போறான்? ஆமாம்! ராஜ் எப்போ ஊருக்கு வரப் போகுதாம்?''— உரிமையுடன் அதட்டிக் கேட்ட வண்ணம் பார்வதி பேத்தியை இழுத்துக் கொண்டு உள்ளே வந்தாள்.

முகம் சிவந்து போன அகல்யா மௌனமாகப் பின்தொடர்ந்தாள்.

''தங்கசாமி. அந்தக் கூடையையும்—தூக்கு செம்பையும் கொண்டு வந்து உள்ளே வை'' என்று டிரைவருக்கு உத்தரவிட்ட பார்வதி வேகமாக ஹாலுக்குள் சென்றுள்.

''பார்வதியா, வா, உட்காரு..'' வாய் நிறைய சிரித்துக் கொண்டு வரவேற்றுள் பஞ்சரத்தினம் மகிழ்ச்சியுடன். சோடா பாட்டில் கண்ணாடி வழியே உறுத்துப் பார்த்

தான். உகும் .... பார்வதி அவளுக்கு நிழலாகத்தான் தெரிந்தாள்.

வேலைக்காரி பூரணியிடம் குழந்தையைக் கொடுத்து விட்டு, விருந்தாளி அம்மாள் உட்கார ஒரு நாற்காலியைத் தூக்கி வந்து மாமியார் எதிரே போட்டாள் அகல்யா. பின்னர் புடவைத் தலைப்பை இழுத்துச் செருகிக் கொண்டு சமையலறைக்குள் ஓடினாள் — தொலை தூரத்திலிருந்து வந்திருக்கும் விருந்தாளிகளுக்குக் காப்பி பலகாரம் தயாரிக்க வேண்டாமா?

''பெரியவன் மகளுக்கு இரண்டு மாசத்துக்கு முந்தி காய்ச்சல் வந்து ஆச்சு போச்சுன்னு போயிடுச்சு — மாவிளக்குப் போட்டு — பாவாடை சாத்துறதாக வேண்டிக்கிட்டேன். அப்படியே உன்னையும் பார்க்கலாம்னு வந்தேன். நமக்கெல்லாம் முத்து மாரிதானே குல தெய்வம்?'' படபடவென்று அவள் பேசியது அடுப்பருகில் நின்ற அகல்யாவுக்கு நன்றாகக் கேட்டது.

''இருந்து சாப்பிட்டுட்டுப்போயேன். எப்ப வந்தாலும் இப்படி கொதி கஞ்சியைக் காலில் ஊத்திக்கிட்டு'' என்று அலுப்போடு கடிந்து கொண்டாள் பஞ்சரத்தினம்.



தன்னைக்காண யாராவது உறவினர்கள் வெகு தொலைவிலிருந்து வந்து விட்டால் அவளுக்குப் பெருமை பிடிபடாது. மகிழ்ச்சியில் மூழ்கிப்போய் விடுவாள்.

''உனக்கு ஊரிலிருந்து சாத்துக்கொடிப் பழமும் — வீட்டிலே கட்ட நெய் அட்டமும் கொணர்ந்திருக்கிறேன். அத்தோட அம்மன் பிரசாதமும் கொஞ்சம் வைச்சிருக்கேன் — எல்லாத்தையும் எடுத்து உள்ளே வைக்கச் சொல். அர்ச்சனை ஆன கையோட ஊருக்குத் திரும்பிடணும்னு இவர் உத்தரவு போட்டிருக்கிறார்.'' குளியலறைப் பக்கம் பேத்தியுடன் விரைந்தாள் பார்வதி.

முகத்தைக் கழுவித் தலை சீராக்கிக்கொண்டு பேத்தியின் முகத்தைக் கழுவித் துடைத்து விட்டபடியே பார்வையைச் சுழற்றினள். பெருக்கித் துடைத்த வீடு... எங்கு திரும்பினுலும் சுத்தமாகக் காணப்பட்டது.

அவளுக்கு மூன்று மருமகன்மார்கள் இருந்தனர். ஏகப்பட்ட வேலை யாட்கள் வேறு. ஆனாலும் அவர்கள் பங்களா இப்படி ஒரு நாளும் சுத்தமாகவே இருந்ததில்லை. இங்கே இங்கே அழுக்குத் துணி — அங்கே புஸ்தகக் குவியல் — காலில் இடறும் பொம்மைகள் — ரேடியோப் பெட்டியின் அலறல் ஒருபுறம். வயதுக் காலத்திலே அமைதியும் நிம்மதியும் துளியாவது அவளுக்கு இருந்தனவா?

அகல்யா அவர்களுக்கு உப்புமா தயாரித்துக் கொண்டிருந்தாள். ஆனாலும் பார்வதியின் ஓங்கிய குரல் அவளுக்குக் கேட்கத்தான் செய்தது.

''பாலக்கரை அண்ணன் மகள் நிர்மலாவை உன் மகனுக்குக் கட்டணும்னு ஒத்தைக்காலில் நின்னியே.... இப்ப சேதி தெரியுமா?'' பஞ்சரத்தினம் வம்பைக் கேட்க நாற்காலியை இன்னும் சற்று அருகில் நகர்த்திக் கொண்டாள்.

''அந்தப் பெண்ணைக் கடைசிலே எங்க ஊரில்தான் நம்ப உறவுக்காரப் பையன் ராமலிங்கத்துக்குக் கட்டிக் கொடுத்தாங்க. தாய்க்கு அவன் ஒரே பிள்ளை. ரொம்பப் படிச்சவன் — சொந்த வியாபாரம் — வீடு வாசல்னு வசதியாத்தான் இருக்கிறவங்க.. என்ன லாபம்! அந்தப் பொண்ணு மாமியாரைச் சீராகவே கவனிக்கறதில்லே. அந்தம்மாளை அது என்ன பாடுபடுத்தறது தெரியுமா?''

''அப்படியா?'' மூச்சை இழுத்துக் கொண்டாள் பஞ்சரத்தினம்.

''உன் மகன் நிர்மலாவைக் கட்டிக்க மாட்டேனுட்டான்னு நீ மூஞ்சியைத் தூக்கி வச்சுட்டு இருந்தே. அவன் கல்யாணத்தின் போது கூட நீ கலகலப்பா இருக்கலே. நீ தப்பிச்சுக் கொண்டதுக்கு ஆத்தாளுக்குக்கும்பிடு போட்டுக்கோ...''

'' நிர்மலாவுக்குப் படிச்சிட்டோம்னு ரொம்பத் திமிர். படுக்கையை விட்டு எழுந்திருக்க மணி எட்டாகுதாம். மாமியார்க்காரி தான் இந்த வயசிலே மூட்டு நோவோட எழுந்திரிச்சு காப்பிப் பலகாரம் பண்ணி மருமகளுக்கு ரெடியா வைக்கறு. கேட்டுக்கோ கதையை. சதா அந்த வீட்டிலே புருஷனுக்கும் மனைவிக்கும் சண்டை, மண்டை உடையுதாம்.''

''அட பாவமே!''

''நம்ப குல தெய்வம்தான் உனக்கு ஒரு நல்ல மருமகளைத் தேடிக் கொடுத்திருக்கான்னு நினைச்சுக்கோ. அகல்யா உன்னை ரொம்ப நல்லா கவனிக்கிறதுன்னு அங்கெல்லாம் ஒரே பேச்சா இருக்கு. பஞ்சா! நீ கொடுத்து வச்சவ. பொண்ணு மட்டும் என்ன? பார்க்கறத்துக்குத் துடைச்சு வச்ச குத்துவிளக்கு மாதிரி பளிச்சுனு எத்தனை அழகா இருக்கா? அப்படியே உன்னைப் பார்த்துக்கறு—வீட்டை எப்படி நகநகன்னு வச்சிருக்கா?'' பஞ்சரத்தினத்தின் காதுகள் குளிர்ந்தன. நெஞ்சு பெருமிதத்திலே விம்மித் தணிந்தது.



''நீ சொல்றது அத்தனையும் உண்மை. ஒண்ணை எடுத்துக்கிட்ட

மகமாயி எனக்கு இன்னெண்ணேக் கொடுத்து விட்டிருக்கா. கண் பார்வை மங்கின சமயம். அகல்யா மட்டும் என்னேக் குழந்தை போல் கவனிச்சுக் காட்டி, நான் என்ன கதியாயிருப் பேனே தெரியாது.'' ஒப்புக் கொண்டாள்.

சாப்பாட்டறையில் மேஜை மீது இலைகளேப் பரப்பி நீர்தெளித்து உப்புமாவையும் தேங் காய் சட்டினியையும் பரிமாறி அவர்களேச் சாப்பிடச் சொல்லி உபசரித்தாள் அகல்யா. காப்பி டம்ளர்களேக் கொண்டு அருகில் வைத்து விட்டு மாமியாரின் கரத்தைப்பிடித்து அன்புடன் அழைத்து வந்து மேஜையருகே இன்னெரு நாற்காலியில் உட்கார்த்திளுள். ''உங்களுக்குச் சாப்பிடச் சாத்துக்கொடி புழிஞ்சு டம்ளரில் வச்சிருக்கேன் — இன்னிக்கு மட்டும் போளுல் போருதுன்னு அம்மன் பிரசாதம் ஒரு ஸ்பூன் மாவிளக்கு மாவைத் தட்டிலே வைச்சிருக்கேன். சாப்பிடுங்க.'' சிரித்துக் கொண்டே சொன்ளுள்.

பின்னர் அந்த மொட்டைப் பையனே வேலேக்காரியிடமிருந்து வாங்கி எடுத்துக் கொண்டு டம்ளரில் தயாராக வைத்திருந்த பசும்பாலே வற்புறுத்தி அவனேக் குடிக்கச் செய்தாள். ஈரத் துணியால் அவன் வாயைத் துடைத்துச் சுத்தம் செய்தாள். விடுவிடு வென்று அவன்செய்த அனேத்தையும் வாயைப் பிளந்தபடி வியப்புடன் பார்வதிகவனித்தாள். அவளுக்கும் இருக்கிருர்களே மருமகப் பெண்கள். யாரிடமாவது இந்தச் சுறுசுறுப்பு இருக்கா!... உள்ளூற ஏக்கப் பெருமூச்சுடன் அவசரமாக உப்புமாவைவிழுங்கி,காப்பியைப் பருகிளுள்.

பின்னர் விருந்தாளி — அவர்களிடம் வெற் றிலேப் பாக்கு குங்குமம் பெற்றுக்கொண்டு பிரியா விடைகொண்டு புறப்பட்டு விட்டாள். ,'பார்வதி கூட கேட்டுட்டா. ராஜ் ஏன் கடுதாசி போடலேன்னு...ம்...'' கிழவி முணு முணுத்துக் கொண்டிருந்தாள்.

அதற்குப் பின்னர் சமையல் வேலேயில் அகல்யா மும்முரமாக ஈடுபட்டு விட்டாள். தளதளவென்று உலேயில் பொங்கிய அரிசி யைப்போல் அவன் உள்ளத்து உணர்வுகள் பொங்கி அலேமோதின. 'ஒரு மாதத்துக்கு மேலாகி விட்டதே. ஏன் இவர் எழுதலே... உடம்புக்கு ஏதாச்சும்..?' சாதத்தைக்கரண்டி யால் கிளறி விட்டுக் கொண்டிருந்தாள். காதில் 'போஸ்ட்!' என்ற வார்த்தை தேளுக ஒலித்தது. அவ்வளவுதான் ஒரே பாய்ச்சலாக வாசலுக்கு வந்து விட்டாள். தபால்காரர் கையில் கண்ட அந்த வெளிநாட்டுக் கடித உறை அவளது மூச்சை மகிழ்ச்சியில் அமுக்கிப் பிடித்தது.

கடிதத்தை வாங்கிக் கொண்டு கதவைத் தாளிட்டு விட்டு உள்ளே வந்தாள்.

''ராஜ்கிட்டேயிருந்தா கடிதாசு வந்திருக்கு? படி'' நாற்காலியிலிருந்து கிழவி தள்ளாடிக் கொண்டு எழுந்து நின்ருள். விழுந்து விடா வண்ணம் மேஜையைப் பிடித்துக் கொண் டாள்.

உறைக்குள் இரண்டு கடிதங்கள் இருந்தன. ஒன்று அவன் தாயாருக்கு. மற்ருென்று அவ ளுக்கு.

அவள் முதலில் பஞ்சரத்தினத்தின் கடி தத்தைப்பிரித்து உரக்கப் படித்தாள். மிகவும் சுருக்கமாகத்தான் எழுதியிருந்தான்.

''அன்புள்ள அம்மா அவர்களுக்கு — ராஜ்குமார் வணக்கம் பல செய்து எழுதிக் கொண்ட கடிதம். நான் விரைவில் ஊருக்குத் திரும்ப இருக்கிறேன். இன்னும் சில வாரங் களில் என்ஒப்பந்தம் முடிவடைந்து விடுகிறது. உடனே கிளம்பி விடுவேன். ஊருக்குப் புறப் படுமுன் கவனிக்க வேண்டிய வேலேகள் பல இருக்கின்றன. அவைகளே முடிக்க வேண்டும் என்று நான் அவசரப்படுவதால் தான் கடிதம் எழுதக்கூட பொழுது இருக்கவில்லே. தாமதத் துக்கு மன்னிக்கவும். உங்கள் உடம்பு இப் போது எப்படி இருக்கிறது? அகல்யா உங்களே அப்போதைக்கப்போது டாக்டரிடம் அழைத் துச் சென்று கவனித்துக் கொள்கிருள் என்று நம்புகிறேன். நான் சுகம். ஆளுல் உங்கள் நினேவாகவே இருக்கிறேன். மற்றவை பின்னர் அன்புள்ள, ராஜ்.''

கிழவி கடிதத்தை இருமுறை படிக்கச் சொல்லிவிட்டுக் கேட்டாள். நெஞ்சை அடைத்த ஆசை கண்களில் நீராகப் பெருகவே கண்ணுடியைக் கழற்றிவிட்டு, புடவைத் தலேப் பால் மெல்லத் துடைத்துக் கொண்டாள்.

''சாப்பாட்டுக்கு நாக்கு செத்துப் போய் வரப் போகிருன். என்னத்துக்குத் தன்னேத் தண்டிச்சுக்கணும்? கடல் போல் வீடு இருக்கு. நஞ்சை — புஞ்சையினு நிலமிருக்கு. உன் மாமஞர் பாடுபட்டுச் சேர்த்து வச்ச பணம் பாங்கியிலே வட்டி போட்டுக்கிட்டுக் கிடக்கு. கவனிச்சுக்க நீ யிருக்கே. இத்தனேயும் விட்டு விட்டு...'' கிழவி பெருமூச் செறிந்தாள். தனக்குக் கணவன் எழுதியிருந்த கடிதத்தைச் சப்த மிடாது பிரித்து அவள் மௌனமாகக் கவனித்தாள். இன்ப உணர்வில் நெஞ்சு படபட வென்று துடித்துக் கொண்டது.

''அன்புமிக்க என் அகல்யா! எப்போது ஊருக்கு வருவோம் என்று துடித்துக் கொண் டிருக்கிறேன். உங்களேயெல்லாம் விட்டு இங்கே வந்தது பிசகுதான். ஒப்புக் கொள்கிறேன்.

---

✕ இவர்: இங்கே ஏன் ஒரே தம்பி கூட்டமா இருக்கு?
அவர்: 'அழகுப்போட்டி' என்று எழுதுவதற்கு அழுக்குப் போட்டி என்று தவறுதலா போர்டு எழுதிட்டாங்க!



✕ ஒரு தம்பிக்குப் பிறந்த நாள் விழா கொண்டாடப் பட்டது. அதில் கலந்து கொண்டவர்கள் அத்தனே பேரும் பிறந்த நாள் வாழ்த்தை இப்படிச் சொன் ஞர்கள் ''தம்பி பர்த் டே டு யூ!''

— கடலூர் கன்னியப்பன்

படித்து விட்டோம். கட்டடக் கலை நுணுக்கங்களை சரவணம் அவர்களிடம் பயிற்சி பெற்றுமே — அவர் கூப்பிடுகிறார் — எப்படி மறுப்பது என்று நன்றிக் கடனுக்காக ஒப்புக் கொண்டு புறப்பட்டு வந்தேன். வருஷங்கள் இரண்டு ஓடி விட்டன. வீட்டையும் அம்மாவையும் நினைக்காத நாள் இல்லை. உன் அழகு முகத்தை எண்ணி ஏங்காத நேரம் இல்லை.

நாட்கள் நெருங்க நெருங்க என்னுள்ளே ஒரு பரபரப்பு ஏற்பட்டு விட்டிருக்கிறது. அவசரமாக இந்தக் கடிதத்தை எழுதுகிறேன். மூச்சுவிட நேரமின்றி வேலைகள் என்னை அழுத்திக் கொண்டிருக்கின்றன. பகலில் வெய்யில் மண்டையைப் பிளக்கிறது. இரவில் ஒரே குளிர். ஊசி குத்துவதைப் போல் காற்று உடலைக் குத்தும் போது. நானாகத் தேடிக் கொண்ட வம்பு இது என்று நொந்து கொள்கிறேன். யாரையும் குற்றம் சொல்வதற்கில்லை. என் தொழில் திறமையை நிரூபிக்க வேண்டுமென்ற பிடிவாதம் என்னைக் கொண்டு வந்து பஹ்ரெய்னில் நிறுத்தி வைத்திருக்கிறது. நீ உடனடியாகப் பதில் போட வேண்டும். ஏன் எனில் நான் வர நாட்கள் சிலவேதான் இருக்கின்றன.

உனக்கு இங்கிருந்து நான் என்ன வாங்கிவர வேண்டும்? இங்குள்ளென்னென்ன கிடைக்கின்றன என்பதைப் பற்றி ஏற்கனவே உனக்கு விவரமாக நான் பல தடவைகள் எழுதியிருக்கிறேன். எனக்குப் பிடித்தமான — 'மிட்நைட்' செண்ட்பாட்டில் ஒன்றை உனக்கு வாங்கி வைத்து விட்டேன். என் பயணம் வாசனையாக ஆரம்பிக்கட்டும் என்ற கருத்தில்! கடைசி கடைசியாக இன்னொரு விஷயம். நான் ஊருக்கு வந்ததும் நேரில் சொல்லி ஆச்சரியமூட்ட விரும்புகிறேன். அதுவரை அது ஒரு ஸஸ்பென்ஸாக இருக்கட்டும். கடிதம் தொடரும் என்று முடிக்கவா? உன் அன்புள்ள கணவன் — ராஜ்.''

அடுப்பில் கொதித்த சாதத்தின் நினைப்பு வந்ததும் அவள் உள்ளே ஓடினாள். சாதத்தை வடித்துப் பானையை இறக்கி மேடையின் மீது வைத்துவிட்டு — கடிதத்தை மறுபடியும் படித்தாள். பகல் உணவுக்குப் பின்னர் இருமுறை படித்தாள். மாலையில் மாடியறையைச் சுத்தம் செய்து படுக்கை விரிப்புகளை உதறி கட்டிலின் மீது விரித்து விட்டு — மறுபடியும் அந்தக் கடிதத்தைப் படித்தாள். அருகே தலைமாட்டில் சாய்ந்தவாக்கில் இருந்த புகைப்படத்தில் சிரித்துக் கொண்டிருந்த கணவனைப் பரிவுடன் பார்த்தாள். படத்தை எடுத்துப் புடவைத் தலைப்பால் அதன் மீது இல்லாத தூசியை மெல்ல துடைத்த போது ... அந்த நினைவு வந்து விட்டது. சாப்பிட்டுவிட்டுக் கையைக் கழுவிக் கொண்டு நிற்பவனிடம் அவள் துவாலையை நீட்டுவாள். அவன் வேடிக்கையாக அவள் முந்தானையிலேயே துடைத்துக் கொண்டு அவள் அப்படியே தன் அருகில் இழுத்து விளையாடுவான்-அந்த நினைவு நெஞ்சக் கிளர்ச்சி யூட்டவே அவள் மறுபடியும் போட்டோவைப் பரிவுடன் பார்த்தாள்.

'என்ன வேணும்... நீங்க சுகமா ஊருக்கு வந்தால் அதுவே போதும்' என்று சொல்லி முடிப்பதற்குள் அவள் கண்கள் கனத்து விட்டன.

(தொடரும்)

## 71–80

**உங்களில் ஒருத்தி:** பிரபலமான நடிகரும், நடிகையும் நடித்து விட்டால் மட்டும் படம் ஓடிவிடுமா? ஓடாது என்பதற்கு இப்படம் சாட்சி. காரணம் படத்தை அழகாக எடுத்து முடிக்க நாயகன் நாயகி ஆகிய இருவரும் சேர்ந்து நடிப்பது போல் குறைந்தபட்சம் இருபது கால் ஷீட்டாவது இருக்க வேண்டும். கதாநாயகிக்குக் காலையில் ஷூட்டிங், கதா நாயகனுக்கு மாலையில் என்று ஒருவருக் கொருவர் தொடர்பில்லாது போனால் என்ன ஆகும் தெரியுமா? 'உங்களில் ஒருத்தி' போல் ஆகும்!

**அன்னக்கிளி:** தமிழ்ப்பட உலகம் இன்று மிகப் பகமையாக இருக்கிறது. எல்லோரும் கிராமத்தில், கிராமத்தை வைத்தே பட மெடுக்கிறார்கள். அப்படி கிராமத்தை நோக்கிப் படை எடுக்க வைத்த முதல் படம் அன்னக்கிளி. சினிமா ஃபார்முலா என்று கூறப்படும் பல விஷயங்கள் இதில் இல்லை. ஆனால் சுவையான, அழகான யதார்த்தமான காதல் கதை இருந்தது. வெள்ளி விழா பட மாகியது.

**சந்ததி:** எனக்குப் பிடித்த சில பாத்திரங் களில் இப் படத்தில் நான் ஏற்ற பாத்திரம் ஒன்று. இந்தப் படத்தின் கதை என்ன என்று யார் எழுதப் புகுந்தாலும் கண்டிப்பாக நாற் பது வரிகளிலிருந்து நாற்பது பக்கங்கள் வரை எழுதலாம். ஆனால் கவியரசு கண்ணதாசனோ எட்டே வரிகளில் அடக்கி விட்டார்.

இரவுக்கு வாழ்ந்த பெண்களில் ஒருத்தி
உறவுக்கு வந்தது என் வீடு — அதில்
வரவுக்கு ஒன்றை வைத்த பின்னாலே
செலவில் முடிந்தது என் ஏடு

வேலியில் ஒருவன் தாலியில் ஒருத்தி
யாருடன் முதலில் நான் கொடுப்பேன் என்
வேஷத்தில் ஒருவன் பாசத்தில் பிறப்பான்
வானத்திலிருந்து நான் பார்ப்பேன்



✘ உறவாடும் நெஞ்சம் படத்தில் சந்திரகலாவுடன்



✘ கவிக்குயில் படத்தில் ஸ்ரீதேவியுடன்



✖ அன்னக்கிளியில் சுஜாதா, சிவகுமார்



கண்ணதாசனின் புலமை என்னை மெய் சிலிர்க்க வைக்கிறது.

**மதனமாளிகை:** 33 மாடி உயர்ந்த கட்டிடம். பெயர் ஓபிராய் ஷெரடன். மாபெரும் ஹோட்டல். - பம்பாயிலுள்ள இதில் 14 நாட்கள் படப்பிடிப்பு. பம்பாயில் மட்டுமே மொத்தம் 37 நாட்கள் படம் பிடித்தோம். பம்பாய் நடிகையான அல்காதான் கதா நாயகி. ஆனால் துரதிருஷ்டம் என்னவெனில் இந்திரா காந்தியின் எமர்ஜன்சி ஆட்சிக் காலத்தில் படம் வெளி வந்ததுதான். பொழுதுபோக்கு அம்சங்கள் நிரம்பப் பெற்ற இது தணிக்கையாளர்களின் பயங்கரக் கத்திரி தாக்குதலுக்கு உள்ளாகியது. விளைவு படம் படுத்து விட்டது.

**நீயின்றி நானில்லை:** இயக்குனர் திருலோக சந்தரின் உதவியாளர் புகழேந்தி, விசுவாசத்துடன் தம் குருவின் பெயரையே தமது நிறுவனத்துக்குச் (திருலோக் பிலிம்) சூடி எடுத்த படம். கதாநாயகிகள் இருவர். சரியாக அக் கதாபாத்திரங்கள் கையாளப் படாததால் படம் எதிர்பார்த்த வெற்றியைப் பெறவில்லை.

**உறவாடும் நெஞ்சம்:** நல்ல பாத்திரப் படைப்பு கிடைப்பது அரிது. அதில் நடித்து அமோக வெற்றி பெறுவது அதைவிட அரிது. கணவன் மனைவி இருவருமே வெவ்வேறு வழியில் இறைவனை அடையப் போகும் நிலையில் அவர்களின் பாசம்தான் படத்தின் உயிர்.

படம் வெற்றி பெற வேண்டும் என்ற ஆசையால் ரிலீஸான அன்று முழுவதும் உண்ணா விரதம் மேற்கொண்டேன். ஆனால் ரசிகர்கள் படத்தை வெற்றிப் படமாக்கவில்லை. முடிவு சரியில்லை என்றனர் பலர். யார் சொல்வது எது சிறந்த முடிவு என்று? எப்படி நிர்ணயிப்பது?

✖ மதனமாளிகையில் அல்கா, சிவகுமார்





# கந்தர்வ கன்னி

சர்வ தேசக் குழந்தைகள் ஆண்டில் கொடிய மந்திரவாதியின் குழந்தைகள் வதைப் படலம்! அடடா! என்ன அற்புதமான கற்பனே!

'ஹஹ்ஹா! என்று மூக்கை ஒரு தடவை தட்டிக் கொண்டு மந்திரவாதி (தியாகராஜன்) உறுமு கிறுன்; அவனது கொடிய சாகசத்தில் அரசன் பயங்கரக் குரங்காகிறுன்; ராஜகுமாரன் ஆமையாகி றுன்! கடைசியில் கொடியவன் மந்திரவாதியின் அழிவில் ராஜகுமாரன் ஜெயசேகரன் (நரசிம்மராஜு) அரச குமாரி மாதவியையும், கந்தர்வக் கன்னியையும் இரட்டை மனைவியராக அடைந்து மகிழ்ச்சி வெள்ளத் தில் மூழ்குகிறுன்.

ஜெயமாலினி (கந்தர்வக் கன்னி)யின் நடனங்கள் ஆபாசமாக இன்றி வேறு எப்படி இருக்கும், பி. விட்டலாச்சாரியா டைரக்ஷனில்? செக்ஸும் மாய மந்திரமும்தானே அவரது இரு முத்திரைகள்!

இந்த மிக்சர் பொட்டலத்தில் முந்திரிப் பருப்பாக விளங்குவது ஒளிப்பதிவாளர் வேணுவின் காமிராப் பதிவுகளே!

பி.எஸ்.எம்.

---

**பத்ரகாளி:** வாழ்க்கையில் எதிர்ப்படும் ஏற்றத்தாழ்வு பிரச்னேகளை முன்கூட்டியே அறிய முடியுமா? வசதி படைத்த எவரேனும் வாசலில் வறுமை நிற்பதை, உள்ளே நுழையக் காத்திருப்பதை உணர்கிறீர்களா? துன்பமே நமது நிழல் என்பதை மகிழ்ச்சியோடு இருக் கும் யாராவது எண்ணிப் பார்க்கிறீர்களா? இதையெல்லாம் சொல்லி அறிந்து ஒப்புக் கொண்டவர்தான் நடிகை ராணிசந்திரா! அதற்கேற்ப அவர் வாழ்க்கையும் அமைந்தது! நல்லதொரு தமிழ்ப்படத்தில் நடித்து நல்ல பெயர் வாங்கிப் பாராட்டுப் பெற வேண்டும் என்று துடித்தார். அவர் ஆசை நிறைவேறும் தருணத்தில் -வெண்ணெய் திரண்டு வரும் பொழுது தாழி உடைந்தாற்போல் ஆகி விட்டது. புகழைச் சில நாளேனும் அவர் அனு பவிக்கும் வரை இறைவன் காத்திருந்திருக்கக் கூடாதா?

**சொன்னதைச் செய்வேன்:** இப்படத் தின் வசனங்களில் வளரும் ஜாலமும் அதிகம். அதற்காக அதிகமான கைத்தட்டல்களும் அன்று பெற்றுர் வசனகர்த்தா. ஆனல் அவரே இன்று வார்த்தைகளைக் குறைத்து இதயத்தைத் தொடுகிறுர். அவர்தான் ''தங் கப் பதக்கம்'' மகேந்திரன்.

**எதற்கும் துணிந்தவன்:** மாறுதல் என்ற ஒரே நோக்கத்திலேயே இப் படத்தில் நடித் தேன். ஆம், எனக்கு இதில் 'கௌபாய்' வேடம்!

**கவிக்குயில்:** யதார்த்தக் கதையில் மாயா ஜால சம்பவங்கள் ஒட்டாது என்பதை நிரு பித்த படம். ஓர் இசைக் கலைஞனின் வாழ்க் கையில் தெய்வம் பல அற்புதங்களை நிகழ்த்து வதாகக் கதை பண்ணக்கூடாது என்று உணர்த்திய படம். இதையெல்லாம் யோசி யாமல் படமெடுத்தால் அது ரசிகர்களுக்குக் கேலிக் கூத்தாக அமையும் என்பதை வெட்ட வெளிச்சமாக்கியது இப்படம்.

பேட்டி: ''**சலன்**''

---

வெகு நாட்களாக லண்டன் (இங்கிலாந்து) நகர வங்கியொன்றின் ஊழியர்களுக்கு ஒரு குழப்பம். அதாவது ஓர் இளம் பெண் தங்கள் வங்கிக்கு விஜயம் செய்யும் போது மட்டும், அங்குள்ள கம்ப்யூட்டர் தவறுன தகவல்களைக் கொடுப்பதைக் கண்டார்கள். கடைசியில் விஷயம் என்ன வென்றுல், அந்தப் பெண் அங்கு வரும் போதெல்லாம், அவள் அணிந்திருந்த செயற்கை இழை ஆடையினுல், கம்ப்யூட்டரில் ஒரு 'நிலைமின் சாரம்' (Static Electricity) ஏற்பட்டு கம்ப்யூட்டர் தவறுன தகவல்களைக் கொடுத்திருக்கிறது.

ஆதாரம்: நியூஸ்வீக்
எஸ். முருகேசன்



சுஜாதா

# வைரங்கள்

## அத்தியாயம் 5
## ...சீக்கிரமே...

காதர் தன் மாளிகையைத் தெருக் கோடிக்கு மாற்றியிருந்தான். Cold Spot என்று முகம் பூரா எழுதியிருக்கும் பெட்டிக் கடைக்குப் பின் பக்கத்தில் நொடித்துப்போன சினிமாக்காரர்கள் விட்டுப் போன பெரிய போர்டு ஒன்றின் ''சக்கைப் போடு'' என்ற எழுத்துக்கள் மட்டும் அவன் நிழலுக்குப் போதுமானதாக இருந்தது. ''போடு ராஜா''வை வேறு ஒரு க்ளீனருக்குக் கொடுத்திருக்கிறான். ராத்திரி படுக்க மட்டும் சீதா விலாஸ் மூடிய பிற்பாடு அடுக்கப்படும் பலகைகளுக்குப் பக்கத்தில் ஓர் இடம். அதிகாலை பைப்புக் குழாயில் குளியல். அப்புறம் லாரி. ப்ரேமைக் கண்டால் தொடை நடுக்கம். உடனே ஓட்டம்.

இன்று நாஸ் வந்து தன்னைக் கூப்பிடும்படியாக என்ன பெரிய தப்புச் செஞ்சோம் என்று காதர் பயந்தான். ''யாருண்ணே?''

''சின்ன எசமானருதான் கூப்பிட்டாரு வாடா!''

''நான் வல்லிங்க நாஸண்ணே. அன்னிக்கு ஜோட்டாலே அடிச்சாரு.''

''அடிக்க மாட்டார்டா. அன்பாத்தான் கூப்பிடுறாரு வா.''

மெதுவாப் பம்மிப் பம்மி வந்து நாஸின் பின்னால் ஒளிந்து கொண்டு சின்ன எஜமானனை எட்டிப் பார்த்தான்.

''ஏ சோக்ரா நாம் க்யாரே போல்!''

''பேர் சொல்லேண்டா''

''காதர்ங்க!''

''காதர் கர்கே போல்தா; ஹிந்தி ஆத்தா நை க்யா?''

காதருக்கு இந்த 'ஆத்தா போல்தா' எல்லாம் புரியவில்லை. தலையை ஆட்டினான், ''ம்ஹூம்!''

''இவன் முஸ்லிம் இல்லீங்க, காதர்னு சும்மா பேரு!''

''பின்னே இவன் என்ன மதம்?''

''அவனுக்கெல்லாம் மதமாவது ஒண்ணாவதுங்க!''

''பஸ் ஸ்டாண்டிலே வெள்ளைக்காரன் உட்டுட்டுப் போயிட்டாங்க!'' என்றான் காதர்.

''நம்ம பெரிய எசமான் ஒரு வித்தைக்காரனுடம் நாப்பதோ, அம்பதோ கொடுத்து வாங்கினாருங்க!''

''காதர் இந்தக் கல்லு ஞாபகம் இருக்கா?'' என்று ப்ரேம் தன் பையில் கைக்குட்டையில் சுற்றியிருந்த கல்லை எடுத்துக் காட்டினான்.

மனோகரியின் இனிய முகம் ஞாபகம் வந்தது. ''ஆம்'' என்று தலையசைத்தான்.

''எங்கே கிடைச்சது உனக்கு?''

''அண்ணே! ராவிமுக்கிலே அந்தப் பொண்ணு இருந்திச்சில்ல, அது கொடுத்திச்சு!''

''ராவிமுக்கு? க்யா ராவிமுக்கு?''

''க்வாரிக்குப் போற பாதையில டீக்கடை இருக்குதுங்க. கடைக்காரன் பொண்ணு கொடுத்ததாச் சொல்றுங்க!''

''அந்தப் பொண்ணுக்கு எங்கே கிடைச்சுச்சு?''

''எங்கேடா?''

''தெரியாதுண்ணே'' என்று தலையாட்டினான் காதர்.

''நாஸ்! அந்த டீக்கடைக்காரன் தெரியுமா ஒனக்கு?''

''ஓ! ரொம்ப நாளாப் பழக்கங்க.''

''இங்கிருந்து எவ்ள தூரம்? நஸீக் பட்டாஹை க்யா?''

''இருக்குங்க. ஒரு இருபது மைலு.''

''சின்ன வண்டி எடுத்துக்கிட்டு வா அங்க போய் வரலாம்.''

''இப்பவா?''

''ஆமா.''

''ஏங்க! என்னங்க அந்தக் கல்லுல?''

''கல்லுல ஒண்ணும் கிடையாது. கண்ணாடி! அந்த எடத்தில நல்ல க்ரானைட்டு

எதுனுச்சியும் கிடைச்சாப் பார்க்கலாம். பிஸி னெஸ் அவ்ளவ்தான்! காதர் நீயும் கூட வா!''

''கார்லங்களா?'' என்றான் தாஸ்.

''பரவாயில்ல வரட்டும். அந்தப் பையன் என்ன இப்படி டிராயர் போட்டிருக்குது. போஸ்ட் பாக்ஸ் வளியா பைப்புக்குளா தெரி யுது ரே சோக்ரா'' என்று சிரித்தான்.

காதர் வெட்கப்பட்டு மூடிக்கொண்டு, ''அண்ணே ஒரு பின்னு கொடுங்க'' என்றான்.

''அபர்ணாவில ஒரு நல்ல சட்டை டிரா யர் வாங்கிக் கொடுத்திரு இவனுக்கு. நான் சொன்னதாச் சொல்லு. எங்க தங்கியிருக் கான்?''

''அங்கே! நாயுடு கடைப் பின்னாலங்க!''

''இன்னிய இருந்து பட்டறைக்கே வந் துறட்டும். சோக்ரா அச்சா ஹை! பலா ஹை! இந்தா பையா'' என்று ஐந்து ரூபாய் கொடுத்தான். காதர் தயங்கினான்.

''வாங்கிக்கடா!''

''வெச்சுக்க எடம் இல்லிங்க. பை இல் லிங்க!' தாஸண்ணே நீங்க வெச்சுக்கிட்டு அப்புறம் தாங்க!''

''கார் எடுத்துட்டு வா. அரை மணிலே வா!''

• • •

''அடி சக்கை! அதிர்ஷ்டம் பார்ரு உனக்கு?''

''அண்ணே! வாங்க கடை மூடிடுவான்!''

''நம்ம எஜமான் கடைதானே! சொன் னாத் திறப்பாங்கடா!''

கண்ணாடிப் பெட்டிக்குள் இருந்த சிறுவன் கட்டம் கட்டமாக டெரிலின் சட்டை அணிந்து 'சிக்' என்று சில்க் நிஜார் அணிந்து காதரைப் பார்த்து ப்ளாஸ்டர் ஆஃப் பாரிஸ் சிரிப்புச் சிரித்துக் கொண்டிருக்க,

''அண்ணே! எனக்கு அது மாதிரி வேணும்!'' என்றான்.

''அதெல்லாம் வெல ஜாஸ்தி. காக்கிலே நிஜாரும் சட்டையும் வாங்கிக்க!''

''அண்ணே! அந்த பீயில் வைச்ச சட்டை அண்ணே!''

''அண்ணே! அந்த முயல் பனியன்!''

''த பாரு கொடுக்கறதை வாங்கிட்டுப் போட்டுக்க என்ன?''

பெரியசாமி பெரிய கல்லில் அரைத்துக் கொண்டிருந்தான். அந்த பிளஷர் கார் தன் கடை வாசலில் வந்து நிற்பதைப் பார்த்து ஆச் சரியப்பட்டான். ''அட! நம்ம தாஸண்ணேன். அது யாரு சேட்டுப் பிள்ளா?''

கையலம்பிக் கொண்டு வெளியே வந் தான் பெரியசாமி.

''பெரியசாமி இதபாரு. இவர்தான் சின்ன முதலாளி.''

''கும்புடறேனுங்க.''

ப்ரேம் தன் தலையை ஒரு தடவை சாய்த் தான். சிகரெட் பற்ற வைத்துக் கொண்டு சுற்றிலும் பார்த்தான்.

''பெரியசாமி! அது யாரு பார்த்தியா?''

''அட! நம்ம காதரு! டேய் காதர் பையா! என்ன இதெல்லாம் புதுசா காஸ் சராய், சட்டை?''





காதர் காக்கி உடைகளில் தொள தொள வென்று வெட்கப்பட்டுச் சிரித்து 'ச்' என்றான்.

''அந்தப் பொண்ணு எங்கங்க?''

''எசமானரு ஒரு விசயமில்ல கேக்க வந்திருக்காரு. பெரியசாமி!''

''சொல்லுங்க.''

''ஒரு தபா நாங்க வந்திருந்தப்ப உம் பொண்ணு ஒரு கல்லைக் காதர் கிட்டக் கொடுத்ததாமில்ல?''

''கல்லா?''

''ஆமடா, கூளாங் கல்லு மாதிரி. தபாரு! இத்தன பெரிய கல்லு''

''ஆமாமா... ஞாபகமிருக்கு.''

''அந்தக் கல்லு எங்க கிடைச்சது அதுக்கு?''

''எங்க கல்லுல என்ன?''

''கல்லுல ஒரு மண்ணுமில்ல. அது எங்க கிடைச்சது தெரியணும்'' என்றான் ப்ரேம்.

''அது எம் பொண்ணுக்குத்தாங்க தெரியும். எப்பப் பார்த்தாலும் பூமியில தோண்டிக் கிட்டே இருக்கும். எதுனாச்சியும் பளபளன்னு கிடைச்சுதுன்னா அவ அம்மா கிட்டக் கொணாந்து கொடுத்திடும்.''

''பொண் எங்க? அதைக் கேள்'' என்றான் ப்ரேம்.

''அதுக்குப் பேச வராதுங்க. ஊமை.''

''சர்தான்!''

''இருங்க நான் கேட்டுப் பாக்கறேன். காதர்! நேராப் போனா குளத்தடி மரத்திலே ஊஞ்சலாடிக் கிட்டிருக்கும். கூட்டியா!''

காதர் குதித்துக் குதித்து ஓடினான். சின்னதாக மரம். சின்னதாக ஊஞ்சல். விழுந்தால் சிரிப்புத்தான் வரும். செல்லமாகத்தான் அடிபடும்.

ஊஞ்சல் ஆட ஆட இலைகளின் ஊடே சூரிய ஜாலம் தரும் இலவச வைரங்கள். மனோகரியின் மௌன உலகில் மனசுக்குள்

வார்த்தைகளற்ற கனவுக் காட்சிகளில் அப்பா வெள்ளைச் சட்டை அணிந்து அம்மா நிறைய நகைகள் அணிந்து தன்னை முன்னே நிறுத்திப் பார்க்கத் தனக்குப் பேச்சு என்றால் என்ன என்பது புரிகிறது. காதர் தொடத் திடுக்கிட்டுத் திரும்பினாள். அடையாளம் தெரியவில்லை. காதர் தன் காதை இழுத்து நாக்கை நீட்டினான். அட இவனா!

''உங்கப்பா கூப்பிடறாங்க'' என்று அபிநயித்தான்.

'அப்பாவா! வரேன்' என்று ஆவலுடன் ஓடினாள். காதர் கூடவே தன் ஸ்பீடைக் குறைத்துக் கொண்டு சமமாக ஓடினான்.

பெரியசாமி, காதர், தாஸ், கொஞ்சம் ப்ரேம் எல்லோரும் முயன்று பார்த்தார்கள். அந்தக் கல்லை எங்கே பொறுக்கினாய் என்கிற கேள்வியை அவளுக்குப் புரிய வைப்பதற்கு-

ம்ஹூம். குழந்தை திருதிருவென்று விழித்தது.

''அதும் அம்மாவாலேதாங்க முடியும்'' என்ற பெரியசாமி உள்ளே சென்று தட்டி மறைவுக்குப் பின் பேசினான். சற்று நேரம் கண்ணாடி வளையல் ஒலி கேட்டது. திலகம் தன் முழங்கை வரை துடைத்துக்கொண்டு வெளியே வந்தாள்.

திலகம் தன் பெண்ணுக்கு முன் மண்டியிட்டுக் கொண்டு கீழே இருந்து ஒரு கல்லை எடுத்து 'அன்னனிக்கு....' என்று கையைப் பின்னால் காட்டி, காதரைக் காட்டி அவன் கையில் பொறுக்கின கல்லைக் கொடுத்து 'எங்கே கிடைச்சுது?' என்று ஓர் அபிநய முத்திரை செய்து முடித்தாள்.

ப்ரேம் திலகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். அந்த மௌன பாஷையின் அசைவுகளோடு அவள் அங்கங்கள் அசைவதும் நெற்றியில் பெரிசாகப் பொட்டும் மெல்லிய உதடுகளும்...

'பாப்ரே! இந்த இடத்தில் இப்படி ஒரு வைரம் கூட இருக்கிறதா?'

புரிந்துகொண்ட மனோகரி தன் தாயின் புடவைத் தலைப்பைப் பிடித்து இழுத்துக் கடையின் பின்புறம் கூட்டிச் சென்று- எல்லோரும் அந்தச் சிறுமியைப் பின்தொடர, ஒற்றையடிப் பாதை தாண்டி, ஆல மரத்தில் தொங்கின ஊஞ்சலைத் தாண்டி, கன்னி வெளியில் நடந்து, தரிசு நிலத்துக்கு வந்து-'இங்கே தான் கண்டெடுத்தேன்' என்று காட்டியது.

ப்ரேம் மண்ணைக் காலால் கிளறிப் பார்த்தான். கரளை கரளையாகக் கரிசல் உருண்டைகள், காட்டுச் செடிகள். ஓரத்தில் பெரியசாமி பட்ட பாடு. ஒரு சின்னப் பசுமைச் சதுரம்.

''இந்த நிலம் யாருக்குச் சொந்தம்?''

''என்னதுதாங்க.''

''எத்தினி ஏக்கரா?''

''ஏக்கராக் கணக்குத் தெரியாதுங்க, அந்த ஆலமரம் வரைக்கும் என்னதுங்க. தரிசுங்க! பாடு ரொம்பங்க!''

''அதுக்கு அப்பாலே?''

''அதெல்லாம் பொறம்போக்கு. கவர்மெண்டு நிலம்.''

தாஸ், ''இங்கதான் கல்லு கிடைச்சதாமா?'' என்றான்.

''அப்படித்தான் குழந்தை சொல்லுது.''

ப்ரேம் சுற்றிப் பார்த்தான். கொஞ்ச தூரத்தில் திலகம் நின்று கொண்டிருந்தாள், நிலம் நோக்கியபடி. ப்ரேம் பார்ப்பதைப் பார்த்ததும் தன்னை இன்னும் மூடிக் கொண்டாள்.

''பெரியசாமி! இந்த நிலம் எனக்கு வேணும்!''

''இதுல ஒண்ணும் வெளையாதுங்க!''

''பட்டா எல்லாம் சரியா இருக்குல்ல?''

''என்னங்க?''

''பட்டா! காயிதம்! பத்திரம்!''

''இருக்குதுங்க. எங்கப்பாரு நிலமுங்க இது. அவரு காலத்துக்கப்புறம் எனக்கு வந்திருச்சுங்க.''

''பெரியசாமி இந்த நிலத்தை வித்துடறது. ஸேல் பண்ணிடறது.''

''ஏங்க?''

''நல்ல விலைக்கு வரும்.'' யோசித்தான். ''இந்த இடத்திலே ஒரு சின்ன கல்லு ஃபாக்டரி வெக்கறேன் நான். அதுக்கு உன் நிலம் வேணும். இங்க இந்த இடத்துக்கு என்ன உண்டோ அதுக்குக் கொஞ்சம் ஜாஸ்தி பண்







## சிங்கக்குட்டி 1,1,1 !

'சென்னையில் இருட்டுப் பயம் அதிகமாயிட்டுதாமே ? இந்த 'ஜேம்ஸ் பாண்ட்' கிட்ட பொறுப்பை விடுங்க. நான் 'கவனிச்சுக்கிறேன்' என்கிறுன் மேலட்டையில் காட்சி தரும் சிறுவன் அருண்.

வண்ணப்படம் எடுத்தவர்: நாராசிங்கம்.

ணியே கொடுக்கறது. சேட்டுக்கு உன் நிலம் புடிச்சுப்போச்சு. நம்மைகல கொடுத்துடறது.''

''இல்லீங்க!'' என்ருன் பெரியசாமி.

''என்னது? என்ன இல்லே?''

''நாம் [illegible]கொடுக்கறதில்லிங்க.''

''நல்லா [illegible] பாரு. நல்ல கிமந் தர்ருன்.''

''எனக்கு வேண்டாங்க. அக்கம் பக்கத்தில எவ்வளவோ இடம் இருக்குது. ஃபாக்டரி வைச்சுக்குங்க.''

''அக்கம் பக்கம் கவர்ன்மெண்ட் ஜமீன் மேன்! அவுங்க கொடுக்கிறதில்லே.''

''நானும் கொடுக்கறதில்லே. எங்கப்பாரு சாவறச்சே சொல்லிட்டுப் போயிருக்காரு.. பெரியசாமி, நிலத்தை மட்டும் வித்துருதே. ரொம்ப ஓஞ்சுத் தரிசைக் கொஞ்சம் கொஞ்சமாப் பகமையாக்கி யிருக்காருங்கன்னு!''

''வேறே நிலம் சிங்காநல்லூர்ப் பக்கம் தரேன் மேன்! ஃபஷ்ட் கிளாஸ் நிலம்!''

''எஜமான்! இந்த இடத்திலே பிரத்தியேகமா என்ன இருக்குது?''

''ப்ரத்யேகம் மதலப்?''

''பெஷலா இந்த இடம்தான் வேணுமான்னு கேக்கருன்.''

''ஆமா! ஏன் சொன்னு க்வாரி பக்கத்துல இருக்குது. ஸ்பெஷலாக் கட்டடக் கல்லுங்க கிடைக்கும். க்ரஷர்வெச்சுறலாம்னுட்டு!''

''பக்கத்தில வேற இடம் பாருங்க!''

''என்ன மேன் திருப்பித் திருப்பிச் சொல்றே! பக்கத்ல கவர்மெண்டு ஜமீன்! நல்ல ஆஃபர் கொடுத்தா மாட்டேன் மாட்டேன் சொல்றியே!'' என்ருன் கோபத்துடன்.

பெரியசாமி களையைப் பிடுங்கிப் போட்டு ''சரிதான் போய்யா'' என்ருன்.

தாஸ் தன் முதலாளியைத் தனியாக அழைத்து:''நீங்க கொஞ்சம் விட்டுப் பிடிங்க. அப்புறம் இவன் கூடப் பேசித் தீர்த்து வைக்கிறேன். கொஞ்சம் தண்ணி போடற ஆசாமி. முதல்ல ரப்பாத்தான்பேசுவான்!''

ப்ரேம் அதற்கு மேல் அதிக ஆர்வம் காட்ட விரும்பவில்லை. முதலில் பட்டாவைப்பார்க்கலாம். ''இந்த எடம் எந்த ஊர் பஞ்சாயத்தைச் சேர்ந்தது?''

''நெடுப்பாக்கம்ங்க.''

''தாஸ் அங்கே போயி கொஞ்சம் ரெவின்யூ ரிகார்ட்ஸ் பார்த்துறலாம் என்ன? பெரியசாமி! அப்ப உனக்கு என் ஆஃபர் வேண்டாம். பரவா நஹி. எனக்குக் கோபமில்லே. நான் கேட்டேன் நீ மாட்டேன்னு சொன்னே? அவ்வளதான். தீர்ந்து போச்சு. ஜகடா வேண்டாம். சோக்ரி அளகாஇருக்குது. பாவம். பேச்சு வராது, இல்லே? டாக்டர் காட்னியா?'' என்ருன் திலகத்திடம்.

''எல்லாம் நிறையக் காட்டிட்டங்க!'' என்ருன் பெரியசாமி.

''ஒரு தடவை கூட்டி வாங்க. பெரிய டாக்டர். நான் சொன்னு இனுமாப் பாப் பாரு. வரட்டுமா? நமஸ்தே பெஹன்ஜீ !''

**கா**ர் சென்றதும் திலகம் ''என்னவாம்?'' என்ருன்.

''இவ்வளவு நாளா கேட்டுக்கிட்டுத்தானே இருந்த! நிலத்தை விக்கிறியான்னு கேட்டான் சேட்டு. மாட்டேன்னுட்டேன்!''

''சிங்காநல் லூர்ல வேற நல்லநிலம் தரேன்னுங்களே!''

''சொன்னுங்க! அதுக்கு?''

''இந்த வெத்து நிலத்தைக் கட்டிக்கிட்டு மாரடிக்கிறதை விட சிங்காநல்லூர்ப் பக்கம் கிடைச்சதுன்னு பருத்தி, சோளம் எதுவானு வெளயுமுங்க! அங்க இந்தப் பாடில்ல. என் தம்பி வேறே இருக்கான் அங்கனே!''

''ம்ஹூம். எங்கப்பாரு நிலத்தை நான் செத்தாலும் விக்க மாட்டேன்.''

''க்கும். டீக்கடையில ஆயுசு பூராவா?''

''இதுல உனக்கு என்னடி குறைவு?''

''ஒரு குறைவுமில்லே. சந்தோ....சம்!'' என்ருள் சந்தோஷமின்றி.

''சில வேளையில ஒன்னைப் புரியமாட்டேங்குது திலகம்!'' என்ருன் பெரியசாமி.

**"தா**ஸ்! உனக்கு அந்தாளை எவ்வளவு நாளா தெரியும்?''

''நல்ல பளக்கங்க.''

''ஒரு தபா அவுங்களை டவுனுக்குக் கூட்டியாறியா?''

''மூணு பேரையுமா?''

''இல்லே. ரெண்டு பேரையும்.''

''சரிங்க.''

''சீக்கிரமே.''

''சரிங்க.''

''பட்டா அப்புறம் பார்க்கலாம். நேரே வக்கீல் வீட்டுக்கு ஓட்டிரு.'' (தொடரும்)



Dr. S. R. சிவராஜ்

**வாலிபர்கள்!** **மணமானவர்கள்!!**

**வாழ்க்கையில் ஏற்பட்டுள்ள பலஹீனங்களை நீக்கி, தாம்பத்திய வாழ்வை இன்பமுடன் அனுபவித்து மகிழ, இன்றே புகழ் பெற்ற 'ரகசிய வியாதி நிபுணர்' ஆண்மைக் குறைவு நீக்கும் 'அரிய வைத்திய மேதை'**

## 'கவிராஜ்' டாக்டர் S. R. சிவராஜ், R.I.M.P.

அவர்களிடம் சிறந்த முறையில் சிகிச்சை பெற, அவர் சுற்றுப்பயண முகாம்களில் நேரில் சந்தித்து வாழ்வில் மகிழ்ச்சி காணுங்கள். நேரில் சந்திக்க முடியாதவர்கள், குறைகளை விபரமாகத் தலைமை அலுவலகத்துக்கு எழுதவும். (கடிதங்கள் ரகசியமாகப் பாதுகாக்கப்படும்.) மருந்துகள் விரிவான விளக்கங்களுடன் வி.பி.பி. மூலம் அனுப்பி வைக்கப்படும்.

❋ **குழந்தை பாக்கியம் (கர்ப்ப அணுக்கள்) இல்லாதவர்கள்**
❋ **கல்யாணமாகி பல ஆண்டுகளாகக் குழந்தை பாக்கியமே இல்லாதவர்கள்**

சிறந்த முறையில் சிகிச்சை பெற்று, கர்ப்ப அணுக்கள் தேவையான அளவு உற்பத்தியாகி குழந்தை பாக்கியம் பெற்று மகிழ்ச்சியடையும் வாய்ப்பை ஏற்படுத்திக் கொள்ளுங்கள். 25 வருட சுற்றுப் பயணத்தில், அவரிடம் சிகிச்சை பெற்றுப் பலன் அடைந்தவர்கள் பல்லாயிரம் பேர்கள். அவர்களைப் போல் நீங்களும் பலன் அடைய வேண்டுமல்லவா?

**விரைவில் பலன் காண விசேஷ 1 மாத சிகிச்சை ★ குறைந்த ஸ்பெஷல் 1 மாத சிகிச்சை**

| A-வகுப்பு | B-வகுப்பு | C-வகுப்பு | மீடியம் | ஸ்பெஷல் | 1-ம் நெம்பர் | நேரில் பெறலாம் |
|---|---|---|---|---|---|---|
| ரூ. 350-00 | 250-00 | 175-00 | 115-00 | 90-00 | 75-00 | V.P.P.யிலும் பெறலாம் |

மாதாந்திர சுற்றுப் பயண விவரம்: ஒவ்வொரு ஆங்கில தேதிகளிலும்

**பிரதம வைத்தியர் தங்குமிடங்கள்:**

சென்னை-600002, 1 முதல் 5ந் தேதி வரை: ராமச்சந்திரா லாட்ஜ், போன்: 846526. 6 அத்திப்பட்டன் தெரு, அண்ணாசாலை சமீபம். P ORR. & Sons — பெட்ரோல் பங்க் மேற்புறம் ரோடு. காலை 7 மணி முதல் இரவு 7 மணி வரை.

சேலம் தலைமை அலுவலகம்: 6, 7, 8, 11, 16, 17 18, 19, 20, 27, 28, 29, 30 தேதிகள்.

திருச்சி: 9, 10 தேதி: அசோக் பவன், ஜங்ஷன் ரோடு. போன்: 25783, காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கோவை: 12, 13ந் தேதி. ஸ்ரீ லக்ஷ்மி லாட்ஜ், ராஜ வீதி, போன்: 33330.

பொள்ளாச்சி 14ந் தேதி: மாடர்ன் லாட்ஜ், தாலுகா ஆபீஸ் எதிர் சந்து, காலை 8 மணி முதல் 12 மணி வரை.

திருப்பூர் 14ந் தேதி: ராமகிருஷ்ணா லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. மாலை 3 மணி முதல் 5 மணிவரை.

ஈரோடு 15ந் தேதி: ஆனந்த் லாட்ஜ், ஈஸ்வரன் கோவில் வீதி. காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

மதுரை 21, 22 தேதி: மணீஸ் கேப். (டவுன் ஹால் ரோடு) போன்: 22019. காலை மணி முதல் இரவு 7 மணி வரை.

தூத்துக்குடி 23ந் தேதி: ராதா லாட்ஜ், ஜி. சி. ரோடு, காலை 9 மணி முதல் பகல் 12 மணி வரை.

திருநெல்வேலி: 23, 24ந் தேதி: நெல்லை லாட்ஜ். காலை 7 மணி முதல் இரவு 8 வரை.

மதுரை 26ந் தேதி: மணீஸ் கேப், டவுன் ஹால் ரோடு, போன்: 22019. காலை 7 மணி முதல் இரவு 8 மணி வரை.

திண்டுக்கல் 26ந் தேதி: ஆரியபவன் லாட்ஜ் பழனி ரோடு. மாலை 4 மணி முதல் இரவு 8 மணி வரை.

**உதவி வைத்தியர் தங்குமிடங்கள்:**

விழுப்புரம் 3ந் தேதி: வாசவி விஹார் ஹோட்டல், எம். ஜி. ரோடு. காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கடலூர் என்.டி. 3ந் தேதி: ஹோட்டல் பிருந்தாவன். மாலை 3 மணி முதல் இரவு 8 மணி வரை.

சிதம்பரம் 4ந் தேதி: ஜெயராம் லாட்ஜ், (மேல வீதி) காலை 7 மணி முதல் பகல் 3 மணி வரை.

கும்பகோணம் 5ந் தேதி: தாஜ்மஹால் லாட்ஜ் பொற்றாமரைக் குளம் (போன்: 1423) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

தஞ்சாவூர் 6ந் தேதி: அசோகா லாட்ஜ், (ராஜா கலை அரங்கம்) காலை 7 மணி முதல் மாலை 6 மணி வரை.

கம்பம் 21ந் தேதி: யூனிவர்சல் லாட்ஜ், காலை 8 மணி முதல் பகல் 12 மணி வரை.

தேனி 21ந் தேதி: பாண்டியன் லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

விருதுநகர் 23ந் தேதி: ஹோட்டல் ஆஞ்சநேயா. காலை 7 மணி முதல் 12 மணி வரை.

இராஜபாளையம் 23ந் தேதி: அசோகா லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

நாகர்கோவில் 24ந் தேதி: உடுப்பி ஸ்ரீ கிருஷ்ண பவன், போஸ்டாபீஸ் ஜங்ஷன் ரோடு, காலை 7 மணி முதல் மாலை 5 மணி வரை.

தென்காசி 25ந் தேதி: பார்வதி லாட்ஜ், காலை 7 மணி முதல் பகல் 12 மணி வரை.

கோவில்பட்டி: 25ந் தேதி சரஸ்வதி லாட்ஜ், மாலை 3 மணி முதல் 6 மணி வரை.

**தலைமை அலுவலகம்:**

## சிவராஜ் சித்த வைத்தியசாலை

**C-56, தமிழ்ச் சங்கம் ரோட் பின்புறம்**

*(சென்ட்ரல் டாக்கீஸ் வடபுறமுள்ள ஏரியின் முன் பக்கம்)*

**காந்தி ஸ்டேடியம் – சேலம்-636007**

கொழும்பு மாநகர் — நாட்டின் தலைநகருக்கே உரிய பரபரப்புடன் அன்றைய நாளைத் துவக்குகிறது.

சத்தரம் ஸ்ரீட். காலை மணி ஒன்பது முப்பது.

பாராளுமன்றக் கட்டிடத்தின் அருகே டபுளை விட்டிறங்கிய புஞ்சி மெனிக்கா வேர்க்க விறுவிறுக்க ஓடிவந்து அந்தத் தெருவிலுள்ள மூன்று மாடிக் கட்டிடத்தினுள் நுழைகிறாள்.

ஒரே நிமிடம்.

லிப்ட் அவளைச் சுமந்து கொண்டு மூன்றாவது மாடிக்கு விரைகிறது. அங்குதான் அவளது அலுவலகம். சீட்டில் போய் அமர்ந்த சில விநாடிகளிலேயே ஸுப்பர் டி லூக்ஸ் ஏர் கண்டிஷன் செய்யப்பட்ட அறை அவள் வியர்வையை விரட்டியடிக்கிறது. வேலையில் சுறுசுறுப்பாக மூழ்குகிறாள்.

அவள் ஒரு டைப்பிஸ்ட் அங்கே.

அவள் அமர்ந்ததுமே பல ஜோடிக் கண்கள் அவளை மொய்க்கின்றன. எத்தனை வருடங்கள் பார்த்துக் கொண்டிருந்தாலும் திகட்டாத அழகு. தினமும் வண்ண வண்ண உடைகளில் பொலிவுடன் அவள் உள்ளே நுழைந்ததுமே அங்குள்ள ஆண்களுக்குப் புது உற்சாகம் துளிர்க்கும். அந்த வண்ணத்துப் பூச்சி அவர்களுக்கு ஒரு கண் கொள்ளாக் காட்சி.

புஞ்சி மெனிக்கா அழகின் எல்லை! சிங்களப் பெண்களுக்கே உரிய செழுமையான உடற்கட்டு, கவர்ச்சிகரமான முகவெட்டு, சுழலும் திராட்சை விழிகள், ரோஜா இதழ்கள், முத்துக்கள் கோத்தது போல் பல்வரிசை, வெண் சங்குக் கழுத்து, கண்டி இழுக்

# சிங்களத்துப் பெண் சீறினள்...



கும் மார்பகங்கள் — இந்த அழகுக்கெல்லாம் அழகு செய்யும் கச்சிதமான கண்டி மாவட்ட உடை.

அந்த அலுவலகத்தில் அக்கவுண்ட்ஸ் அஸிஸ்டண்டாக வேலை பார்க்கும் யாழ்ப் பாணத்தைச் சேர்ந்த நடராசாவுக்கு அவள் மேல் இரண்டு கண்.

நடராசா ஒரு ''சொல்லத்தான் நினைக்கிறேன்'' டைப்.

புஞ்சி மெனிக்காவைத் தன் உளமாரக் காதலித்த அவன் ஒரு நாள் கூடத் தன் காதலை, தன் துடிப்பை அவளிடம் சொல்லவில்லை. அதில் அவனுக்குத் தயக்கமும், மயக்கமும் அதிகப்படியாகவே இருந்தன. தான் அவளிடம் போகா விட்டாலும் அவள் தன் பெரிய படிப்புக்கும் அழகுக்கும் தன்னை விரும்புவாள் என்று மனத்துக்குள்ளேயே வண்ண வண்ணக் கனவுகளை உருவாக்கி, மகிழ்ச்சியில் திளைத்துக் கொண்டிருந்தான் அவன்.

ஆனால் ஒரு நாள் எல்லோர் தலையிலும் ஒரு நியூட்ரான் குண்டைத் தூக்கிப் போட்டாள் புஞ்சி மெனிக்கா.

யாரும் எதிர்பாராத வகையில் எல்லார் கையிலும் திடீரென்று தன் கல்யாணக் கார்டைக் கொடுத்து எல்லாருக்கும் பேரதிர்ச்சி கொடுத்தாள்.

அந்த அதிர்ச்சியில் அதிகமாகத் தாக்குண்டவன் நடராசாதான்.

அவள் கல்யாணத்தில் ஒரு வித்தியாசம்.

அவள் சிங்களப் பெண்ணாயிருந்தும் ஒரு சிங்களவரைக் கல்யாணம் செய்யாமல் ஒரு தமிழனைக் கல்யாணம் செய்வதுதான்.

கல்யாணக் கார்டை நடராசாவிடம் நீட்டி, ''கண்டியிலே கல்யாணம். கண்டிப்பாக வந்திடுங்க'' என்றாள் எந்தச் சலனமும் இல்லாமல்.

அதை வாங்கிய நடராசா பிரமை பிடித்தவன் மாதிரி உட்கார்ந்திருந்தான். அவனுக்கு எதுவுமே பேசத் தோன்றவில்லை. ''டூ லேட்'' என்று அவன் மனம் அடித்துக் கொண்டது.

**க**ல்யாணம் முடிந்து இரண்டொரு வாரங்களில் புஞ்சி மெனிக்கா அலுவலகம் வந்து விட்டாள்.

திருமணத்துக்குப் பின் அவள் அழகில் ஒரு புதுப் பொலிவும், மெருகும் ஏறியிருந்ததை நடராசனின் கண்கள் கண்டன. அவளைப் பார்க்கும்போதெல்லாம் ''சே... கண்ணெதிரே இருந்த தீஞ்சுவைக் கனியைக் கை நழுவ விட்டு விட்டோமே... இப்படியொரு அழகும் குணமும் கொண்ட பெண் அமையுமா எனக்கு'' என்று அவன் மனம் அடித்துக் கொண்டது.

புஞ்சி மெனிக்கா வேலையில் சேர்ந்த மூன்றாம் நாள் நடராசாவை ஒரு முக்கியமான வேலைக்காக அந்த அலுவலகத்தின் யாழ்ப்பாணக் கிளைக்கு மூன்றுமாத தாற்காலிக டிரான்ஸ்பர் பண்ணினார்கள்.

நடராசாவுக்குத் தன் சொந்த ஊருக்குப் போவதில் ரொம்ப மகிழ்ச்சி. அன்றிரவே யாழ்தேவி எக்ஸ்பிரஸில் யாழ்ப்பாணம் கிளம்பி விட்டான்.

ஊர் போய்ச் சேர்ந்த அவனை அவனுடைய அம்மா ராசம்மா சீக்கிரம் கல்யாணம் பண்ணிக்கொள்ள வேண்டும் என்று நச்சரித்தாள்.

''அம்மா.... கோஸ்ட் அக்கவுண்டென்ஸி பரீட்சை சித்தி(பாஸ்) பண்ணிப்போட்டுக் கல்யாணம் பண்றேன்.'' ஒரு நொண்டிச் சமாதானம் சொல்லுகிறான் நடராசா.

''எட விசரா (பைத்தியம்) நீயும் உந்த (இந்த) பரீட்சை' பரீட்சை எண்டு மூனு வருஷமாய்த்தான் சொல்லிக்கிட்டு இருக்கிற... நீ படிச்சு முடிக்கும் வரைக்கும் பபாச்சியைக் கோலம் போட்டுக் கொண்டு இருக்கச் சொல்றியே...; ஓமெண்டு சொல்லு... சட்டு புட்டுண்டு கதையை முடிச்சுடலாம்.''

**அ**டுத்த வாரம் அவனும் அவன் தாயும் பபாச்சியைப் பெண் பார்க்கப் போனார்கள்.

பபாச்சியை நடராசாவுக்கு அவ்வளவாகப் பிடிக்கவில்லை. தாயிடம் இதைச் சொல்கிறான்: ''அம்மா! பெட்டை ரதி.... ரம்பை என்டு சொன்னீங்க.... அவ்வளவு வடிவாயில்லையே?''

''உஸ்! மெள்ளப் பேசு! ஏண்டா இப்பிடியெல்லாம் கதைக்கிறாய்? அவைய கேட்டா எவ்வளவு வருத்தப்படுவினம். பெற்ற தாய் உனக்குக் கெடுதலா செய்திடப் போறேன்... பேசாமல் ஓமெண்டு சொல்லு!''

அதிருப்தியை வெளியிட்ட நடராசாவை அடக்கினாள் ராசம்மா. அவளுக்கு எப்படியாவது பபாச்சியைத் தன் மகனுக்கு முடித்து விடவேண்டும் என்பதில்தான் குறி.

தாயும் மகனும் நல்ல பதிலைச் சொல்லி விட்டுப் பெண் வீட்டாரிடம் விடைபெற்றுக் கொண்டார்கள். அடுத்த வாரமே நிச்சயதார்த்தம் நடந்தது. கல்யாணம் அடுத்த வைகாசி மாதம் என்று முடிவாகியது.

**யா**ழ்ப்பாணத்தில் தன் அலுவலக வேலையை முடித்துக் கொண்டு மீண்டும் கொழும்புக்குத் திரும்பினான் நடராசா.

அன்று மாலை அலுவலகம் விட்டதும் எல்லோரும் வீட்டுக்குக் கிளம்பி விட்டார்கள்.

ஆனால் புஞ்சி மெனிக்கா மட்டும் வீட்டுக்குக் கிளம்பாமல் டைப்ரைட்டரில் தலையைச் சாய்த்துக் கொண்டு சோகமாக உட்கார்ந்திருந்தாள். இதைப் பார்த்த நடராசா

---



எப்பேர்ப்பட்ட மனிதனும் தனக்குப் புற்றுநோய் என்றால் அதிர்ச்சி அடைந்து நடைப்பிணமாகி விடுவான். ஆனால் பிரிட்டிஷ் விஞ்ஞானி பி. எஸ். ஹால்டன் இதற்கு ஒரு விதிவிலக்கு. தமக்குக் கான்சர் வியாதி என்று தெரிந்ததும் அவர் என்ன செய்தார் தெரியுமா? கான்சர் வியாதியைப் பற்றி ஒரு நகைச்சுவைக் கவிதை எழுதிச் சிரித்தாராம்!

ஆதாரம் : ஃபிலிம் இந்தியா
தகவல் : கன்னிகா

# இந்த வாரக் கண்கள்:

# வாசகர்களுக்கு ஓர் அழைப்பு!

சுஜாதா



## இந்த வாரக் கவிதை:

வேல் விழிந்த கண்களிலே
விளையாடும் ஒளியழகும்
விலைகளில்லை

—கவியரசு
கண்ணதாசன்

''என்ன புஞ்சி மெனிக்கா... வீட்டுக்குப் புறப்படலையா?'' என்று கேட்டான்.

''வீடு என்று ஒன்று இல்லாமல் இருந்தால் நன்ருக இருக்கும்.'' விரக்தியாகப் பேசினுள் புஞ்சி மெனிக்கா. அவள் அப்படிச் சோகமாக இருந்தும், பேசியும் நடராசா ஒரு நாள் கூடப் பார்த்ததில்லை.

''கல்யாணம் முடிஞ்க அவ்வளவு சீக்கிரம் இவ்வளவு விரக்தியா?''

''ஆம் மிஸ்டர் நடராசா! அக்கரைப் பச்சையை விரும்பிய நான் இப்போது அவஸ்தைப்படுகிறேன். கல்யாணம் பண்ணினல் ஒரு தமிழரைத்தான் கல்யாணம் பண்ணுவேன் என்று படிக்கும் காலத்திலேயே சவால் விட்டவள் நான். தமிழர் பண்பாடு, அவர்களின் உழைப்பு, கலாசாரம், — எல்லாம் எனக்குப் பிடித்தவை. அதனுல் குடும்பத்தின் எல்லா எதிர்ப்புக்களையும் முறியடித்து அவரைக் கல்யாணம் பண்ணினேன்.''

அவள் பேசியதைக் கேட்ட நடராசா அதிர்ந்து போனுன். ''அப்போ... உன் கல்யாணம் காதல் கல்யாணமா?''

''ஆமாம்.'' பட்டென்று பதில் வந்தது புஞ்சி மெனிக்காவிடமிருந்து.

நடராசாவை அவளது பதில் சற்று சிந்திக்க வைத்தது. 'தன் காதலை இவ்வளவு ரகசியமாய் வைத்திருந்து கல்யாணமும் பண்ணி யிருக்கிருளே? நான் அவளை....ஒரு சிங்களப் பெண்ணை மணம் முடிக்க விரும்ப அவளோ ஒரு தமிழனை விரும்பி... நினைச்சதை முடித்து விட்டிருக்கிருளே, அவளுக்கு இருந்த மன உறுதியும் விடாப்பிடியும் தனக்கில்லாமல் போய் விட்டதே...

''சரி. இப்ப என்ன ஆச்சு?''

''என் கணவர் ஏற்கனவே இந்தியாவில் மணமானவர்.'' அவரது மனைவி இப்போது இந்தியாவிலிருந்து வந்து விட்டாள். அவளை வேறு இடத்தில் குடித்தனம் வைத்திருக்கிருர் என் கணவர். அவள் வந்துவிட்டதும்...''

''ஐயோ...ஐயோ... சிக்கல் பயங்கரமாயிருக்கு'' என்று சொல்லித் தலையில் அடித்துக்கொண்டான் நடராசா.

இந்த அழகான சிங்களத்து வண்ண மயிலுக்கு இப்படி யொரு வேதனையும் சோதனையுமா? அவனையும் அறியாமல் அவன் நெஞ்சு துடித்தது.

ஆனல் அந்தத் துடிப்பு நொடியில் மறைந்தது. வேதாளம் மீண்டும் முருங்கை மரத்தில் ஏறிக் கொண்டது. அவளது இக்கட்டான நிலைமையைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்த அவன் மூளை வேலை செய்ய ஆரம்பித்தது. படிப்படியாக.

புஞ்சி மெனிக்கா வேறு யாரிடமும் அவ்வளவு நெருக்கமாகப் பழகுவதில்லை. எல்லாம் நடராசாவிடம்தான். அவனுடைய

பரிச்சயம் அவனுக்கு மன அமைதியைத்தந்தது: பல விஷயங்களை மனம் திறந்து அவன் நடராசாவிடம் பேசுவதால், அவனுக்கு அசைக்க முடியாத நம்பிக்கை வந்துவிட்டது. அவள் தன் கணவனை விட்டு விட்டுத் தன் னிடம் சேர்ந்து விடுவாள் என்று.

அவன் நம்பிக்கை ஆலமரமாக வேரூன் றவே, ஒரு நாள் யாழ்ப்பாணத்திலிருக்கும் தன் தாய்க்குக் கடிதம் எழுதிப்போட்டான், பபாச்சியைத் தான் கல்யாணம் செய்யப் போவதில்லை என்று.

யாழ்ப்பாணத்தில் அந்தக் கடிதத்தைப் படித்து முடித்த ராசம்மா தலையைப் பிய்த் துக் கொண்டாள்.

அங்கே அவள் துயரத்தில் உழன்றுகொண் டிருக்க, இங்கே நடராசா, புதுத் தெம்புடன் இருந்தான். பாங்க் ஆஃப் சிலோனில் இருந்த அவனது சேவிங்ஸ் பாதி குறைந்து கணக்கற்ற கால்சட்டைகளாகவும் டியூரோ ஷேர்ட்டுகளாகவும், டி.ஐ. ஷூக்களாகவும் மாறி அவன் பர்சனாலிடியைத் தூக்கிக் காட்டிக் கொண்டிருந்தன.

புஞ்ச்சி மெனிக்காவின் புதுப் பரிச்சயம் அவனுள் ஒரு புரட்சியையே ஏற்படுத்தி விட்டிருந்தது.

அன்று! காலை டீ வேளை.

புஞ்ச்சி மெனிக்கா மிகவும் சோர்ந்த முகத் துடன் நடராசாவின் சீட்டு அருகே வந்தாள்.

''ப்ளீஸ் சிட் டவுன்'' — அவளை அமர வைத்தான், தன் அருகே இருந்த நாற்காலி யில். வேறு யாரும் அங்கு இல்லை அப்போது. தேநீர் அருந்தக் கீழே போய்விட்டிருந் தார்கள். நடராசாவின் கண்கள் அவளை எக்ஸ்ரே பண்ணின சில நொடிகள். சோக மாக இருந்தாலும் அவள் கவர்ச்சியில் குறையவில்லை என்று நினைத்தது அவன் மனம். அவள் தன் வழக்கமான பிரச்னையுடன் வந்திருக்கிறாள், இறுதி முடிவு காண என்று பட்டது அவனுக்கு. ஆகவே இன்று தைரிய மாக முடிவெடுக்கச் சொல்லிவிட வேண்டும் என்று தீர்மானித்தான்.

''புஞ்ச்சி.... மிஸ்டர் கருப்பையாவை உடனே டைவோர்ஸ் பண்ணு! அப்புறம்... அப்புறம்... என்னைக் கல்யாணம் செய்து விடு....''

அவன் முடிக்கவில்லை.

''வாட்! என்ன சொன்னீங்க நடராசா? டைவோர்ஸா அப்புறம் உங்களைக் கல்யாணம் பண்ணறதா...: என் பிரச்னைகளை மனம் திறந்து உங்கள் கிட்டச் சொன்னது ஒரு நல்ல ஆபீஸ் நண்பர் என்கிற முறையிலேதான். இந்தச் சிறு பிரச்னைக்காக டைவோர்ஸா... என் கணவர்கூட என்னைக் கட்டுகிறதற்காகத் தன் முதல் மனைவியை டைவோர்ஸ் பண்ண வில்லை. அப்படியிருக்க நீங்கள் இந்த எஸ்ட்ரீம் ஸ்டெப் எடுக்கச் சொல்லிவிட்டு உங்களை.... அதுவும் ஒரு பெண்ணை யாழ்ப் பாணத்தில் நிச்சயம் பண்ணிவிட்டு வந்த உங்களை மறுமணம் பண்ணச் சொல்றீங்க. இப்படிப்பட்ட நீங்க நாளைக்கு என்னைக் கல்யாணம் செய்துபோட்டு டைவோர்ஸ் பண்ண மாட்டீர்கள் என்பது என்ன நிச்சயம்? டைவோர்ஸ் நான் நினைக்கப் பார்க்காத ஒன்று. நீங்க அதைவிட ஒரு படி மேலே போய் மறு மணம் என்று வேறு சொல்றீங்க. லேடீஸ் ஆர் நாட் பிளே திங்ஸ். மெல்லிய தாகவும், நளினமானதாகவும் 'தோன்றும் பெண்மை ஆழமானது. மிக மிக ஆழமானது. நீங்க ஒரு ஜெண்டில்மேன் என்று நினைச்சுத் தான் என் கவலையைச்சொன்னேன். அந்த விஷயங்களை நீங்க வேறு கோணத்தில் பார்த் திருக்கீங்க என்பது இப்பத்தான் தெரியுது. அவற்றை வைத்து நீங்கள் மனசில் வசந்த மண்டபம் கட்டியிருக்கலாம். அதற்கு நான் எப்படிப் பொறுப்பாக முடியும்?'' — ஆக் ரோஷமாகப் பேசி முடித்தாள் புஞ்ச்சி மெனிக்கா.

அவளது ஒவ்வொரு சொல்லும் ஒவ்வொரு குண்டூசியாக நடராசாவைக் குத்திக் கிழித் தது. இந்த ஷாக் ட்ரீட்மெண்டில் அவன் உடம்பு சிலிர்த்துப் புல்லரித்தது. அவன் உள்ளத்துச் சலனமும், கண்களின் பின்னணி யில் கனன்று கொண்டிருந்த காமமும் வெறியும் கலைந்தன. அவளின் எதிரே மாமலையின் அடிவாரத்தில் நெளிந்தோடும் ஒரு சிறு புழுவாகத் தன்னை உணர்ந்தான்.

''புஞ்ச்சி மெனிக்கா... ஐ ஆம் வெரி சாரி! ப்ளீஸ் ஃபார்கெட் எவ்ரிதிங் லைக் எ பேட் ட்ரீம்... இனிமேல் உன் பெயர் புஞ்ச்சி மெனிக்கா இல்லை. புஞ்ச்சி கன்னகி. (சின்னக் கண்ணகி)! இப்போதே போய் அம் மாவுக்குத் தந்தி அடிக்கிறேன். என் கல் யாணத்தை இந்த வாரமே வைக்க ஏற்பாடு செய்யச் சொல்லி.'' என்று கூறிவிட்டு லிஃப்டை நோக்கி ஓடினான் நடராசா.

புஞ்ச்சி மெனிக்கா மெய்மறந்து அப்படியே நின்றாள்.

அன்று மாலை யாழ்ப்பாணத்தில் நடராசா வின் எக்ஸ்பிரஸ் தந்தியைப் படித்த ராசம்மா, ''என்ற ராசா ராசாதான்'' என்று நெஞ்சு குளிரச் சொல்லிக் கொண்டு உடனே சாவகச்சேரிக்குப் புறப்பட்டுச் சென் றாள், கல்யாணத்துக்கு நாள் குறிக்க.

---

குதிரைப் பந்தய நேர்முக வர்ணனை சொல்வது எளிது. ஏனென்றால் வென்ற குதிரையிடம் போய், ''உங்கள் அபிப்ராயம் என்ன?'' என்று கேட்டு மைக்கை நீட்ட வேண்டியதில்லையே!

— வில்லியம்ஸ்

—புத்து



# சிரிக்காவிட்டால் விடமாட்டேன்!

● சினிமா தியேட்டரில்: "அட தள்ளி நில்லுப்பா இது பெண்கள் க்யூன்னு தெரியலே?"
"தெரியும், என் தங்கைக்குத்தான் டிக்கட் வாங்கணும்."

● "அவன் கிட்டே எது கேட்டாலும் ஏதாவது சாக்குச் சொல்லித் தப்பிச்சுக்கறானே, யார் அவன்?"
"ஹோல் சேல் சாக்கு வியாபாரி!"

— சந்திரசேகர்

● போலீஸ்காரர்: நீ விபத்தில் சிக்கிய பெண் மணி 300 பவுண்டு... நீ 150 பவுண்டுதான். எப்படி வெளியில் கொண்டு வந்தாய்?
காப்பாற்றினவன்: நான் இரண்டு தடவை தூக்கி வந்தேன்!

—எஸ். ராமன்



● கணவன்: தயவு செய்து நம் வீட்டுக்குவருபவர்கள் முன் என்னை மரியாதை யாக நடத்து...!
நடிகை: என்ன அப்படிச் சொல் லிட்டே, நேற்றுக் கூட திருடர்கள் வந்திருந்த போது, மரியாதையாக எந்திரிச்சு மாடிக்குப் போன்னுதானே சொன்னேன்!

● மானேஜர்: மூன்று பக்க லெட்டரில் முந்நூறு பிழை! இதிலிருந்து என்ன தெரியுது?
லேடி டைப்பிஸ்ட்: சராசரியா ஒரு பக்கத்துக்கு நூறு பிழை வீதம் தப்புத் தப்பா அடிக்கிற மோசமான டைப்ரைட்டிங் மிஷினை மாத்தணும்னு!

—உ. ராஜாஜி

● மனைவி: ஏன் இப்படிக் கவலையா இருக்கீங்க?
கணவன்: பர்ஸைப் பஸ்ஸிலே யாரோ பிக் பாக்கெட் செஞ்சிட்டான்.
மனைவி: கவலைப்படாதீங்க. காலையிலேயே அதிலிருக்கிற பணத்தையெல்லாம் முன் ஜாக்கிரதையா நான் எடுத்துட்டேன்.!

—கே. ஆர். எம்.

● ஸ்ரீதர்: நம்ப பாஜு எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் விசிலடிக்கிறான். கையை ஆட்டி சைகை காண்பிக்கிறான்.

முரளி: அவனுக்கென்னடா. அவங்கஅப்பா பல் டாக்டர். கவலையில்லே. நம்மளைச் சொல்லு.

● நடிகை: எங்கம்மாவுக்கு நடிக்கணும்னு ரொம்ப நாளா ஆசை. உங்க படத்திலே ஏதாவது ஒரு சின்ன ரோல் கொடுங்களேன்.
தயாரிப்பாளர் இந்தப் படத்திலே ஒண்ணும் இல்லே. அடுத்தது ஒரு பயங்கரப் படம் ஒண்ணு எடுக்கப் போறேன். அதில் உங்க அம்மாவுக்கு நிச்சயம் ஒரு பெரிய ரோலே தர்றேன்.

● சீதா: எங்க வீட்டுக்காரர் இன்னொருத்தியோட ரொம்ப நாளா "கனெக்ஷன்"வைச்சுக்கிட்டிருந்தது. இப்பத்தான் தெரிஞ்சுது.
பாமா: அடப்பாவமே யார் அவள்?
சீதா: அவங்க ஆபீஸ் டெலிபோன் ஆபரேட்டராம்.

● அவன்: நம்ம சந்தேகப்பேர்வழி ராமுவுக்குக் கல்யாணம் நிச்சயமாச்சே. ஏன் இப்படி டல்லடிச்சுப்போய்க் கிடக்கிறான்?
இவன் : கோல்ட் கவரிங் கடை வைச்சிருக்காரே, அவர் பொண்ணைத்தான் கட்டிக்கப் போறான். அவரு சுத்தமான தங்கத்திலே நகை போடு வாரா, இல்லே, கவரிங் நகை களைப் போட்டு ஏமாற்றிடுவாரா என்ற சந்தேகத்தி லிருக்கான்.

— ஆர். கோபாலகிருஷ்ணன்



● நண்பர்: புது மானேஜர் ஆள் எப்படி?
மற்றவர்: அவசியங்களை விட அநாவசியம் தான் ரொம்ப அவசியம்கிற மாதிரி அவர் பேசும் போது அநாவசியமா அவரோட வாதம் பண்ணறது அவசியம்தானான்னு அநாவசியமான சில குழப்பங்கள் நமக்கு அவசியம் வந்தே தீரும்.

● டாக்டர்: தினமும் தவறாமல் உங்கள் கணவர் அந்த மருந்தைக் காதிலே போட்டுக்கிறாரா?
மனைவி: எத்தனையோ தரம் சொல்லிப் பார்த்துட்டேன் டாக்டர். அதை அவர் காதிலேயே போட்டுக்க மாட்டேங்கறார்.

—ஸ்ரீஜ




● ஆயிரம் வரிகளில் ஐந்தாறு வரிகள்புதைந்து போகலாம். ஆனால் படம்? அரைப்பக்கம் அடைத்துக் கொண்டு கண்ணில் இடிக்குமே? அதில் ஜாக்கிரதை வேண்டாமா?

சுஜாதா கதையின் மூன்றாவது அத்தியாயத்தில் முந்நூற்றுப் பதின்மூன்று வரிகளில் (சந்தேகமிருந்தால் எண்ணிப் பார்த்துக் கொள்ளவும்) சின்னி தன் பாவாடை தாவணியைச் சரிப்படுத்தி ஊக்குப் போட்டுக் கொள்ளும் ஒரு வரிதான் ஜெயராஜ் படம் வரைய உதவியிருக்கிறது.

So the number of hypocritic Journalists has increased by one with yourself as the latest addition.

திருச்சி-21 வெ. ஹேமலதா

● நவரசக் கதைகளில் எதை முதலில் படிப்பது என்று திக்குமுக்காடிப் போனேன். கடைசியில் ஒருவழியாகப் படித்து முடித்தேன். எழுதிய அனைவருக்கும் பாராட்டுக்கள். அதனை வெளியிட்ட தங்களுக்கு எனது ஊரில் பிரசித்தி பெற்ற ''போளி''யை அனுப்பலாமா?

கடம்பூர் கே. பாலாஜி

● நான் எதிர்பார்த்ததைவிட அதி அற்புதமாக இருந்தது கல்கி சிறுகதைச் சிறப்பிதழ். காதல் சிறப்பிதழைப் பற்றி இப்போதிருந்தே இனிய கனவுகள் பல கண்டு கொண்டிருக்கிறேன்.

வடுகவிருட்சியூர் ஆர். அமுதா

● ஆசிரியருக்கு ஒரு வேண்டுகோள். மாதம் ஒரு சிறுகதை சிறப்பிதழ் வெளியிடுங்களேன்.

கோவை மீரா. ரவீந்திரன்

● சிறுகதை சிறப்பிதழில் வெளியான ஒன்பது சிறுகதைகளும் ரத்தினங்கள். அவற்றிற்கு அருகே சிறுகதைகளைப் பற்றிப் பல அறிஞர்களின் கருத்துக்களை வெளியிட்டது, கதைக்கேற்ப வெளியிடப்பட்ட போட்டோ படங்கள் அனைத்தும் என்னைக்கவர்ந்தன.

தஞ்சாவூர்-6 கோவிலடி ஜோஸப் ராஜ்

● ஏனோ சிறுகதைக்கு ஓவியர்கள் அமைத்த படத்திலுள்ள கவர்ச்சி உண்மையில் புகைப் படத்தில் இருக்கவில்லை. நிஜத்தை விட நிழலுக்கே மௌசு அதிகம் என்பதை இது நிரூபிக்கிறது.

பள்ளிபாளையம் ஜீ. இளவழுதி

● அடேடே! ஒன்பது ரசங்களையும் மிஞ்சும் பத்தாவது வகை ரசத்தையும் 'நமது' சிறப்பிதழ் விட்டு வைக்கவில்லையே! 'திருப்பத்தூர் பெற்ற பாக்கியம்' விளக்கும் 'பக்தி' என்ற சிறந்த ரசத்தைத்தான் குறிப்பிடுகின்றேன்!

குரோம்பேட்டை வேதா

● சிறுகதை சிறப்பிதழ் அட்டைப்படத்தில் காட்சிதந்த குமாரி பவானியைத்தலைநிமிர்ந்து பார்க்கச் செய்த வாக்கியம் எது என்பதைக் கண்டு பிடித்து விட்டேன். யுரேக்கா! யுரேக்கா! கல்கி செப்டம்பர் 16 தேதி இதழ் 'காதல் சிறப்பிதழ்' என்பதே அது.

போடிநாயக்கனூர் ரவிராஜ்

● கௌசிகன் எழுதியிருப்பது போல் 'ஏ' சர்ட்டிபிகேட் படம் அல்ல, 'பஞ்சகல்யாணி'. 'யு' சர்டிபிகேட் படம்தான். ஆனால் கண்டிப்பாக 'ஏ' சர்ட்டிபிகேட் கொடுக்கப்பட்டிருக்க வேண்டிய படம்!

மதுரை-11 சக்திநாயனூர்

● ''ஏன் சார்! நடிகர் சிவசந்திரன் அப்படி என்ன பாவம் செய்துவிட்டார்?பஞ்சகல்யாணி பட விமர்சனத்தில் படத்தின் நாயகனை சிவசந்திரனைப் பற்றி ஒரு வரி கூட குறிப்பிடவில்லையே! இளம் நடிகர்களின் வளர்ச்சிக்குப் பத்திரிகை விமர்சனங்கள் முக்கிய இடத்தை வகிக்கின்றன என்பதை மறந்து விடாதீர்கள்.

வேலூர் வேணுகோபால்

● ஆகஸ்ட் 79, 'கல்கி' இதழுக்கு மறக்க முடியாத மாதம். சாண்டில்யன், சுஜாதா கதைகள் என்ன, போதாததற்கு புஷ்பா தங்கதுரை கதை வேறு; அவ்வப்போது செம்பியன் வேறு தலையைக் காட்டுகிறார்; மொத்தத்தில் 'கல்கி'யும் பிழைக்கத் தெரிந்து கொண்டு விட்டது! வாழ்க இலக்கியச் சேவை!

சென்னை-30 வி. ரங்கராசன்

● ''நுண்ணலை அடுப்பு'' பற்றிய தகவலை பிரசுரித்திருக்கிறீர்கள். நுண்ணலை அடுப்புக்கள் (Micro wave oven) இந்தியாவில் தயாரிக்கப்படும் நாள் வெகு தொலைவில் இருப்பதாகக் கூறப்பட்டிருக்கிறது. இது தவறு. எங்கள் நிறுவனம் 1978ம் ஆண்டே நுண்ணலை அடுப்புக்களைத் தயாரிக்கத் திட்டமிட்டு ஒருசில Prototype மாடல்களையும் தயாரித்திருக்கிறது. ஆனால் சில காரணங்களை முன்னிட்டு இன்னும் Mass Production க்கு வரவில்லை. விரைவிலேயே இந்தியாவிலும் நுண்ணலை அடுப்புக்கள் விற்பனைக்கு வரும்.

சென்னை-18 பி. மாதவன்
எலெக்ட்ரானிக் கார்ப்பரேஷன்
ஆஃப் இந்தியா

# ''உசிலை, உசிலை, ஒரு நாள் மட்டும்!''

சாப்பாட்டுப் பிரியரான திரைப்பட நடிகர் உசிலை மணி இளைக்க வேண்டுமென்றால் என்ன செய்வது? இதற்குத் தேவையான உணவுத் திட்டத்தைத் தயாரித்துத் தருமாறு மேற்கு மாம்பலத்தைச் சேர்ந்த பிரபல மருத்துவர் டாக்டர் சந்திரசேகரனிடம் கேட்டேன். மகிழ்ச்சியோடு ஒப்புக் கொண்டு, உணவுத் திட்டத்தைத் தயாரித்துக் கொடுத்தார்.

இந்தத் திட்டத்தை உசிலையிடம் சொன்ன போது அவர் முகம் போன போக்கைப் பார்க்க வேண்டுமே! இருந்தாலும், ''ஒரே ஒரு நாள் தானே? சவாலை நிறைவேற்றுகிறேன்'' ; என்று தம் பெரிய உடலை ஒருமுறை குலுக்கி விட்டுக் கொண்டார்.

காலை டிபன் — இரண்டு இட்லி, ஒரு வடை, காப்பி. டாக்டரைச் சபிக்க ஆரம்பித்தார் உசிலை. ''என் பெரிய உடம்புக்குக் கொஞ்சம் கருணை காட்ட வேண்டாமா? இப்படி பெரிய தடை போட்டு விட்டாரே அந்த டாக்டர். ஹூம் என் கஷ்டம் அவருக்கு எங்கே தெரியப் போகிறது?'' குறைப் பட்டுக் கொண்டாலும் சவாலை ஏற்றார். உற்சாகம் குறையவில்லை.

டிபனை முடித்துக் கொண்டு தம் திரையுலக அனுபவங்களைச் சொல்ல ஆரம்பித்தார்: ''நான் முதல்லே சினிமாவிலே நுழைஞ்சபோது ரொம்பவும் ஒல்லியாக இருந்தேன். அப்போது கதாநாயகனாக என் பெயர் சிபாரிசு செய்யப்பட்டது. ஆனால் இந்தப் பாழாய்ப் போன உடம்பு விலைவாசி மாதிரி குபுக்குன்னு வீங்க ஆரம்பிச்சது. அவ்வளவுதான். என் உடம்புக்காக,என்னை நகைச்சுவை நடிகனாக ஆக்கிட்டாங்க. இப்போ என்னிடம் உள்ள பெரிய ஹியூமர் என் உடம்புதான்.

''சமீபத்தில் நான் நடிச்ச மலையாளப் படம் ''தச்சோளி அம்பு'' படத்தில் ஒரு காட்சி. டைரக்டர் அப்பச்சன் என்னிடம் 'குதிரை ஏறத் தெரியுமா?' என்று கேட்டார். குதிரை சவாரி செய்யும் ஆசையால் தெரியும் என்று பொய் சொல்லி விட்டேன். ஏணியில் ஏறிக் குதிரை மீது நான் அமர்ந்ததும் நாலு கால் பாய்ச்சலில் என்னைச் சுமந்து கொண்டு ஓட ஆரம்பித்தது! பாரம் தாங்காமல் இடையில் என்னைக் கீழே தள்ளி விட்டு அது தனியே ஓட ஆரம்பித்து விட்டது! படப்பிடிப்பு பாக்கியிருக்கிறதே என்பதால் நான் குதிரையைத் துரத்த என்னைத் தொடர்ந்து ஸ்டண்ட் நடிகர்கள் ஓடி வந்தார்கள். ஏக கலாட்டா!'' பேசியவாறே ஒரு கூஜா நிறைய தண்ணீரைக் குடித்தார்.

மதிய உணவு வேளை. ஒரு பெரிய கிண்ணம் சாதம், சிறிய கிண்ணங்களில் சாம்பார், ரசம், தயிர். இதைப் பார்த்தவுடன் உசிலைக்கு அழுகையே வந்து விடும் போலிருந்தது.

மாலை ஒரு கப் டீ, ஐந்து பிஸ்கட்டுகள் உசிலைக்குக் கோபம் வந்தாலும் அடக்கிக் கொண்டார். இப்போது என்னை அனுப்பி விடப் பல தந்திர வழிகளைக் கையாளத் தொடங்கினார்.

''இங்கே பக்கத்திலே பிள்ளையார் கோயில், போய்த் தரிசனம் செய்துக்கிட்டு வாங்க'' என்றார். அசையவில்லை.

மகன் ராஜு, மகள் சாந்தி இருவரும் வந்து, ''அப்பா இன்னிக்கு உனக்குப் பிடிச்ச டிபன் அடை!'' என்றனர்.

அவ்வளவுதான்! உசிலை எங்கே எங்கே என்று உள்ளே ஓட ஆரம்பித்தார்.

அனுபவம்: ''சிக்கி'' படம்: உத்ரா







# பட்டு மலர் மேனிக்கு
# பாவையர் நித்தம் விரும்பும்

# விநிபா

## சந்தன முக பவுடர்







சருமத்திற்கு மென்மையும், பொலிவும் அளிக்கவல்ல மைசூர் சந்தனம், இந்திய அபூர்வ மூலிகைகள், மேனாட்டு வாசனை திரவியங்கள், உயர்ந்த அத்தர் வகைகள், தூய புனுகு, ஜவ்வாது, அரகஜா இவற்றை ஒருங்கே கலந்து விஞ்ஞான ரீதியில் நவீன மைக்ரோஃபைன் முறையில் தயாரிக்கப்படுகின்றன.




**விநிபா ப்ராடக்ட்ஸ்**

'கோகுல் கார்டன்ஸ்' கும்பகோணம்.

Criterion VP 3510 TM



# கடல் ராணி

## சாண்டில்யன்

அத்தியாயம் 5

## பகைவனா? நண்பனா?

**ப**கல் பெரிதும் ஏறி விட்டதால் அந்தக் கருங்கல் அறையின் ஒற்றைச் சாளரத்தின் மூலம் உள்ளே புகுந்து எதிர்ச் சுவரில் பட்டையாக விழுந்திருந்த வெயிலின் காரணமாக அறையில் வெளிச்சம் மிக அதிகமாயிருந்த அந்தச் சமயத்தில்கூட, மரக்கால் மனிதனின் அந்தப் பேய்ச்சிரிப்பு மிகப் பயங்கரமாகச் சுவர்களில் தாக்கி எதிரொலி செய்தது. அந்தச் சிரிப்பில் ஒலித்த குரூரத்தையும் அசட்டையையும் கண்டு எதற்கும் அஞ்சாத ராணியின் இதயத்தில்கூட ஓரளவு அச்சம் உதயமாகவே செய்தது. ஆனால் அந்த அச்சத்தை இம்மியளவும் வெளியில் காட்டாத கடல்ராணி வறட்சியும் அதிகாரமும் மிகுந்த பார்வையை அந்த ஒற்றைக்கால் மனிதன் மீது செலுத்தினாள்.

அவன் யாரையும் லட்சியம் செய்யாமலும், ஆங்காங்கு ஒட்டுப் போடப்பட்ட மாலுமி உடையைப் பற்றி எந்த அக்கறையும் காட்டாமலும், சாய்த்துத் தலையில் குறுக்காக வைக்கப்பட்டுத் தலையின் இருபுறங்களிலும் நீண்டிருந்த 'ஹாட்'டைக் கூட ஒழுங்காக வைக்காமலும், நாற்காலியில் சாய்ந்தே கிடந்தான். தரையில் ஊன்றிக் கிடந்த அந்த மரக்கால் சரியாயிருந்த உயிர்க் காலைப் போலவே உறுதியுடன் தரையில் ஊன்றப்பட்டிருந்தது. இடையிலிருந்த பல கைத்துப்பாக்கிகளும் பல சந்தர்ப்பங்களில் உபயோகப்பட்டிருந்ததற்கு அடையாளமாக அவற்றின் பிடிகள் சிறிதளவு பழுதடைந்திருந்தாலும், சதா கவனிப்பிலிருந்ததன் விளைவாக ரவை திணிக்கும் பகுதியும் சுடும் இடங்களும் பளபளத்துக் கொண்டிருந்தன. ஒவ்வொரு கைத் துப்பாக்கியின் பிடியும் ஒவ்வொரு விதமாக இருந்ததால் அவனுக்குத் துப்பாக்கிகளைச் சேகரிப்பதிலேயே ஒரு தனி ஆசை இருக்க வேண்டுமென்பது புலனாயிற்று. அவன் மத்திய வயதை அடைந்திருந்ததை அவனுடைய கன்னக் கதுப்புகள் காட்டினாலும் கண்களில் பளிச்சிட்ட பயங்கரமும் கூர்மையும் வயது அவனுக்கு எந்தவித பலவீனத்தையும் அளிக்கவில்லை என்பதைச் சந்தேகமற எடுத்துக் காட்டின.

இவையனைத்தையும் கண்டு அந்த மனிதனுடைய குணாதிசயங்களை அலசிப் பார்த்த ராணி அந்த மனிதனிடம் தான் மிகுந்த எச்சரிக்கையுடன் நடந்து கொள்ள வேண்டிய அவசியத்தைத் தெரிந்து கொண்டாள். ஸில்வர் என்ற ஒரு மரக்கால் கொள்ளைக்காரனைப் பற்றியும் மலையாளப் பிராந்தியத்தில் அவன் சென்ற இரண்டு ஆண்டுகளில் அடித்த கொள்ளைகளைப் பற்றியும் அவள் பெரிதும் கேள்விப்பட்டிருந்தாளாதலால் அவன் எதற்காக சிந்து துர்க்கம் வந்திருக்கிறான் என்பதைப் பற்றிய சிந்தனையும் அவள் உள்ளத்தே எழுந்தது. இத்தகைய கொள்





ளைக்காரனிடம் அனந்த் எப்படி சேர்ந்து கொண்டான் என்பதும் விவரிக்க இயலாத புதிராயிருந்தது அவளுக்கு. அனந்தின் பெயரைக் கேட்டதுமே காப்டன் ஸ்டாண்டனும் லெப்டினண்ட் ஸ்மித்தும் நடுங்கியதையும், கார்வார் கோட்டையில் வெள்ளைக்காரர் தலைகளை ஈட்டிகளில் குத்தி நிற்க வைத்த பயங்கரத்தைப் பற்றி அவர்கள் சொல்லித் திகிலடைந்ததையும் எண்ணிப் பார்த்த ராணி, அனந்தும் ஒருவேளை கொடியவனோ என்று நினைத்தாள். ''சே! ஒருகாலுமிருக்காது. இவரைப் பற்றி மகாராஷ்டிரத்தில் பெருமையுடன் தானே பேசிக் கொள்கிறார்கள்'' என்று தன்னைச் சமாதானப்படுத்திக் கொண்டாள். அப்படி சமாதானப்படுத்திக்கொள்ள வேண்டிய அவசியமென்ன என்பதையும் யோசித்துச் சிறிது புன்முறுவலும் கொண்டாள். எப்பேர்ப்பட்ட கடல் ராணிக்கும் பெண் என்ற பலவீனம் போகவில்லை என்பதைச் சிந்தித்துத் தன்னைப் பற்றிச் சிறிது சினமும் கொண்டாள்.

இப்படி அவள் பலபடி யோசித்து நின்று கொண்டிருந்ததை அனந்த் மட்டுமல்ல, மரக்கால் வில்வரும் கவனித்தான். ஆகையால் தனது சிரிப்பைச் சட்டென்று உறைய வைத்துக் கொண்டு தனது விழிகளை ராணி மீது செலுத்தினான் சில விநாடிகள். பிறகு நாற்காலிக்குப் பக்கத்திலிருந்த பாட்டிலை எடுத்து அதிலிருந்த 'ரம்'மை அருந்தினான். அடுத்தபடி அந்தக் குப்பியை மடியில் வைத்துக் கொண்டு இடது கையால் வாயை அலட்சியமாகத் துடைத்து விட்டுக் கொண்டான். அடுத்தபடி அனந்தை நோக்கி ''மை பிரண்ட்! ஹூ ஈஸ் திஸ் பாரட்? யூ நோ ஐ லைக் பாரட்ஸ்'' (தம்பி! இந்தக் கிளி யார்? எனக்குக் கிளிகள் மிகவும் பிடிக்குமே. உனக்குத் தெரியுமல்லவா?) என்று கேட்டான்.

அந்த சொருகக் கேள்வியிலும் குரலின் கர கரப்பு சொல்லத்தரமல்லாததாயிருந்தது.

இதற்கு அனந்த் பதிலேதும் சொல்லவில்லை. இங்க்லண்ட் மட்டும் சொன்னான்: ''அவளுடன் விளையாடாதே வில்வர்; மால்வான் பகுதியின் கொள்ளைக்காரர்களின் தலைவி அவள்'' என்று.

''கொள்ளைக்காரியா?'' என்று வில்வர் மீண்டும் அவளை நோக்கினான். இன்னொரு முறை 'ரம்'மையும் குடித்து நாக்கால் நொட்டை விட்டான்.

''எஸ்''. இங்க்லண்ட் திட்டமான குரலில் பதில் கூறினான்.

* ''லைக் அவர் மேரி மீட்? லைக் அவர் ஆன்?'' (நமது மேரி மீட், ஆன், இவர்களைப் போலவா?) என்று வினவினான் வில்வர். அந்தப் பெயர்களை உச்சரித்த போது அவன் குரலில் பெருமை பெரிதும் ஒலித்தது.

''எஸ்'' — மீண்டும் அந்த ஒற்றைச் சொல்லையே பதிலாகச் சொன்னான் இங்க்லண்ட்.

''ஐ ஆம் ஹாப்பி. மைகாட்! வாட் எ ப்யூடிபுல் பைரேட்! (மிக்க மகிழ்ச்சி. அட கடவுளே! எத்தனை அழகிய கொள்ளைக்காரி) என்று கூறிய வில்வர் தனது குரலில் உண்மையாக மகிழ்ச்சியைக் காட்டினான்.

இந்தச் சமயத்தில் இடை புகுந்த ராணி சொன்னாள், ''நான் கொள்ளைக்காரியல்ல'' என்று.

கடல் வரியைக் கட்டி கனோஜி ஆங்கரேயின் -தஸ்தக் (அனுமதிப்பத்திரம்) வைத்திருந்தால் பிடிக்க மாட்டோம். ஏமாற்ற முயன்றால் போராடுகிறோம்'' என்று பதில்சொன்ன ராணி மேலும் தொடர்ந்தாள்: ''காப்டன் இங்க்லண்ட்! இங்கு வந்துள்ள டச்சுக்காரர்கள், போர்ச்சுகீசியர்கள், இங்கிலீஷ்காரர்கள், வர்த்தகத்துக்காக வரவில்லை. பொன் விளையும் இந்தப் பாரத நாட்டை ஆள, சுரண்ட, கவர வருகிறார்கள். அதை நாங்கள் அனுமதிக்க முடியாது. உங்கள் துப்பாக்கிகளை நாங்களும் வைத்திருக்கிறோம். உங்கள் பீரங்கிகளை நாங்களும் இயக்க முடியும். அதனால்தான் மகாராஷ்டிர ஸார்கேல் (கடற்படைத் தலைவர்) ஆங்கரேயை உங்களால் அடக்க முடியவில்லை. அரபிக்கடலில் அவரது ஆட்சியை அசைக்க முடியவில்லை பெரிய பெரிய ஆங்கிலக் கடற்படைகளால். நாங்கள் செய்வது



வில்வர் ராணியையும் நோக்கி இங்க் லண்டையும் நோக்கினான். அரபிக்கடல், செங்கடல் பிராந்தியங்களில் பயங்கரக் கொள்ளைக்காரனென்று பிரசித்தி பெற்ற இங்க்லண்ட் கூட அந்த மரக்கால் மனிதனின் பார்வையால் சிறிது சங்கடப்பட்டான். அதன் விளைவாக இங்க்லண்ட், ராணியை நோக்கி ''அப்படியானால் நீ இந்தப் பகுதியில் வரும் கப்பல்களை மடக்குவதில்லை? அதிலுள்ள பொருள்களைக் கவர்ந்து கொள்வதில்லை?'' என்று வினவினான் சிறிது உஷ்ணத்துடன்.

''உண்டு. இந்த நாட்டை வர்த்தகத்தின் மூலம் சூறையாட வரும் ஆங்கிலக் கப்பல்களைப் பிடிப்பதுண்டு. எங்களுக்குண்டான கொள்ளையல்ல, தற்காப்புப் போர்'' இதை வெகு வேகமாகச் சொன்னாள் ராணி. அவள் குரலில் உறுதியும், கடுமையும் கலந்து கிடந்தன.

அவள் சொற்களைக் கேட்ட இங்க்லண்ட் அசந்து போனான். ஆனால் வில்வர் சிறிதும் அசரவில்லை. அவன் பயங்கரமாகப் புன்முறுவல் செய்தான். ''மிஸ்! யூ ஹாவ் கிவன் மீ ப்ரெஷ் ஐடியாஸ்'' (பெண்ணே! நீ எனக்குப்

---

* இங்கிலாந்தில் சிறந்த கடற் கொள்ளைக்காரர்கள் மட்டுமல்ல, மேரிமீட், ஆன் போன்ற பிரசித்தி வாய்ந்த கொள்ளைக்காரிகளும் இருந்தார்கள் - Refer "Pirates of Malabar" By col. John Biddulph,

புதிய சிந்தனைகளை அளித்திருக்கிறாய்) என்று பாராட்டினான். ''இங்கலண்ட்! யூ ராஸ்கல்! இப்பொழுது புரிந்ததா உனக்கு? பிறர் கப் பலைப் பிடிப்பது அதிலிருக்கும் பொருள்களை அபகரிப்பது கொள்ளையல்ல. தேச சேவை. ஸர்வீஸ் மைபாய் ஸர்வீஸ்'' என்று இங்க லண்டையும் நோக்கிக் கூறிவிட்டு மீண்டும் பயங்கரமாகச் சிரித்தான்.

காப்டன் இங்கலண்ட் பதிலேதும் சொல் லாமல் கல்லாய்ச் சமைந்து விட்டான். சில விநாடிகளுக்குப் பிறகு பக்கத்திலிருந்த அனந் தைக் கவனித்தான். அனந்த்தின் கண்கள் அரைவாசி மூடிக் கிடந்தன. அவன் மனத்தில் சிந்தனை ஓடுவதைப் பொட்டில் புடைத்திருந்த ஓர் ஒற்றை நரம்பு நிருபித்தது.

எல்லாவற்றையும் அலட்சியம் செய்து அரை உறக்கத்தில் சுவரில் சாய்ந்துகொண்டு,





ஒருவர் : உங்க பையன் ரொம்ப நன்றியுடைய வனா இருக்கான் சார். இது வரைக்கும் யார் செய்த உதவியையும் மறந்ததே கிடையாதுங்க!

பையனின் தந்தை : இருக்க மாட்டானு. சின்ன வயசிலே நாய்க்கு வைக்கிற பிஸ்கட்டை யெல்லாம் இவன் தானே தின்னான்.

ஆர். கோபாலகிருஷ்ணன்



ஒரு காலை மடித்து ஏதோ தவம் செய்பவனைப் போல் சுவரின் மீது வைத்துக் கொண்டு நின்றிருந்தான் அனந்த்.

அவனைச் சுட்டிக் காட்டி இங்கலண்ட் வினவினான் வில்வரை நோக்கி: ''இவனை உனக்கு எப்படித் தெரியும்?'' என்று.

வில்வரின் கண்கள் அனந்தைக் கவனித் தன ஒரு விநாடி.· அப்பொழுது வில்வரின் கண்களில்கூட ஒரு பரிவு காணப்பட்டது. ''ஐ ஓ ஹிம் மை லைப். ஸேவ்ட் மீ ப்ரம் டெத்'' (இப்பொழுது நான் உயிருடனிருப்ப தற்கு இவன்தான் காரணம். மரணத்தின் பிடியிலிருந்து என்னைக் காப்பாற்றினான்) என்ற வில்வரின் கரகரத்த குரலில்கூட எங்கோ நன்றி இலேசாக ஒலித்தது.

இந்த விவரம் இங்கலண்டுக்குப் பெரும் வியப்பைத் தந்ததால் அவன் கண்கள் பெரி தும் மலர்ந்தன. நீல நிறக் கண்மணிகள் மிக அழகிய ஒளியை வீசின. ''வில்வர்! நீ சுய புத்தியிலிருக்கிறாயா?'' என்று வினவினான் இங்கலண்ட்.

''எத்தனை குடித்தாலும் எனது சுய நினைவு தப்பாது'' என்றான் வில்வர்.

''இவன் யாரென்று உனக்குத் தெரியுமா?'' என்று இங்கலண்ட் மீண்டும் வினவினான்.

''தெரியும்'' என்றான் வில்வர்.

''யார்?'' இங்கலண்ட் கேள்வியில் சந்தே கம் தொனித்தது.

''எ காம்ரேட் எ பைரேட்'' (ஒருதோழன் ஒரு கொள்ளைக்காரன்) என்றான் வில்வர்.

''இல்லை. இவன் தோழனும் இல்லை, கொள்ளைக்காரனும் இல்லை. கொள்ளைக்காரர் களை அரபிக்கடல் பிராந்தியத்திலிருந்து ஓட்ட சபதம் செய்து வந்திருக்கிறான்'' என்று இங்க லண்ட் விளக்கினான்.

''யாரிடம் சபதம் செய்திருக்கிறான் அப்படி?'' என்று வினவினான் வில்வர்.

''மகாராஷ்டிர மன்னன் ஷாஹுவிடம்'' என்றான் இங்கலண்ட்.

இதுவரை மௌனமாயிருந்த அனந்த் ''இது பொய். நான் ஷாஹு மன்னரைச் சந் தித்ததில்லை'' என்று இடை புகுந்து கூறினான்.

''டோண்ட் லை (பொய் சொல்லாதே)'' என்றான் இங்கலண்ட் ஆத்திரம் தொனித்த குரலில்.

''அனந்த் நெவர் லைஸ் (அனந்த் பொய் சொல்வதில்லை)'' என்ற அனந்தின் குரல் சிறிது கடுமையாயிருந்தது.

''அப்படியானால் சிந்து துர்க்கத்திற்கு ஏன் வந்தாய்?'' என்று இங்கலண்ட் வினவினான்.

''இங்குதான் எனது நண்பரை மறைத்து வைக்க முடியும். வெளியில் அவருக்கு ஆபத்து இருக்கிறது.''

''யார் அந்த நண்பர்?''

அனந்த் பதிலுக்கு வில்வர் மீது கண்களைத் திருப்பினான். ''வில்வர் உன் நண்பனா?'' என்று வியப்பு நிறைந்த குரலில் கேட்டான் இங்கலண்ட்.

''அவரே சொல்லவில்லையா நான் அவர் தோழன் என்று'' என வினவினான் அனந்த்.

இங்கலண்ட் வில்வரை நோக்கினான். ராணியும் வில்வரை நோக்கினாள். வில்வர் நிதானமாகச் சொன்னான், ''நான் ஏற் கனவே சொன்னேன், இவன் என் தோழன் என்று. அவன் எதிரிகள் எனக்கும் எதிரிகள்'' என்று.

இதைக் கேட்ட இங்கலண்ட் திகைத்துப் போனான். ''நோ நோ ஹீ ஈஸ் அவர் எனிமி அண்ட் எ டேன்ஜரஸ் ஒன் அட் தட்'' (இல்லை, இல்லை. அவன் நமது பகைவன். அதுவும் அபாயமான எதிரி) என்று அச்சத்துடன் சொன்ன இங்கலண்ட் ''வில்வர்! இவன் யாரென்று தெரியுமா உனக்கு?'' என்று வின வினான் சினத்துடன்.

''யூ ஸீம் டு நோ எவ்ரி திங். டெல் மீ'' (உனக்குத்தான் எல்லாம் தெரியுமே, சொல்)

என்ற வில்வர் மடியிலிருந்த 'ரம்' புட்டியைத் தரையில் வைத்துவிட்டு எழுந்தான் சேரிலிருந்து. பக்கத்திலிருந்த ஊன்று கோலை எடுத்துக் கக்கத்திலும் வைத்துக் கொண்டான்.

அவன் நின்ற தோரணையில் ஒரு பயங்கரமும் இருந்தது. கம்பீரமும் இருந்தது. ஒரு குரூரங்கூட கலந்திருந்தது. நின்ற நிலையில் அவன் கேள்வி கேட்கவில்லை. புருவங்களை மட்டும் உயர்த்தினான், லேசாகக் கேள்வி கேட்கும் பாவனையில்.

''இவன் இந்த்ராஜித் அனந்த்'' என்றான் இங்க்லண்ட்.

''தட் ஐ நோ. எனி திங் எல்ஸ்?'' என்று வினவினான் வில்வர்.

இம்முறை இங்க்லண்ட் தனது மார்பு ஹாட்டை நன்றாக நிமிர்த்தி வைத்துக் கொண்டு பூட்ஸ்களைத் தரையில் கரகர வென்று அறைந்தான். கால்களை உக்ரத்துடன் அசைத்து, ''அனந்த்! நீயே சொல் நீ யாரென்று'' என்று அதட்டலான குரலில் கூறவும் செய்தான்.

அனந்த் பதிலேதும் சொல்லவில்லை ஒரு விநாடி. பிறகு பதில் சொன்ன போது இகழ்ச்சி அதில் மண்டிக் கிடந்தது. ''வில்வர் உன்னைத்தான் கேட்டான். நீயே சொல்'' என்றான்.

இங்க்லண்ட் சிறிது தாமதித்தான். பிறகு மிகமெதுவாகச் சொன்னான் ''இவன் ருத்ராஜி அனந்தின் தம்பி'' என்று.

இதைக் கேட்ட வில்வர் மட்டுமின்றி ராணியும் அசந்து போனான். ''யார்! *விஜய துர்க்கத்தின் காவலர், கனோஜி ஆங்கரேயின் வலது கரம், பிரிட்டிஷ்காரர்களின் எதிர்ப்புக்கும் வெற்றிக்கும் பெருந்தடையாயிருப்பவர், அந்த ருத்ராஜி அனந்தின் தம்பியா இவர்!'' என்று மரியாதையும் அச்சமும் கலந்த குரலில் வினவினான் ராணி.

வில்வர் வியப்பு நிரம்பிய விழிகளை அனந்தின் மீது திருப்பினான். ''யுவர் பிரதர் ஈஸ் எ கிரேட் பைட்டர்'' (உன் சகோதரன் பெரிய போர் வீரர்) என்று சிலாகித்தான்.

இங்க்லண்ட் பொறுமை இழந்தான். ''ஆல் ரைட் வில்வர் லெட் அஸ் கோ'' என்று கூறினான் சினம் குரலில் துளிர்க்க.

அந்தச் சமயத்தில் ராணி கேட்டான்: ''எங்கே போகப் போகிறீர்கள்?'' என்று.

''என் கப்பலுக்கு'' என்றான் இங்க்லண்ட்.

இதைக்கேட்ட வில்வர் குதூகலித்தான். ''டூ மீன் த காஸண்ட்ரா ஈஸ் ஹியர்.'' (காஸண்ட்ரா இங்கேயா இருக்கிறது?) என்று கேட்டான் உற்சாகத்தின் ஊடே.

''எஸ்.''

''எங்கு?''

''இங்கிருந்து மூன்று மைல் தூரத்தில்.''

---

* Rudraji Ananth, Angrey's battle - seasoned subedar of Gheria (Vizayadurg) - "Khanoji Angrey Maratha Admiral" - By Manohar Malgonkar - P. 272.

## புதிய வழி!



அமெரிக்காவிலுள்ள இடாஹோ மாநிலத்தில் சாலையின் நடுவிலே நடக்கும் எவரைக் கண்டாலும் போக்கு வரத்துப்போலீஸார் ஒரு டிக்கட் கொடுத்தார்கள். கறுப்புக்கோடு கட்டியிருக்கும் அந்த டிக்கெட்டில் ''எனக்குக் காயம் பட்டாலோ, நான் செத்துப் போனாலோ தயவுசெய்து என்னை இந்த இடத்துக்கு அனுப்புங்கள்'' என்று அச்சிடப்பட்டிருக்கும். அதற்குக் கீழே சில முக்கியமான ஆஸ்பத்திரிகள், சில இடுகாடுகள் இவற்றின் பெயர்கள் போட்டு அச்சிட்டிருக்கும். நடக்கிற வருடைய பெயர், விலாசம் போன்ற விவரங்களைக் குறிக்கக் காலி இடம் விடப்பட்டிருக்கும்.

போலீசார் இந்த டிக்கட்டுகளை வழங்கத் தொடங்கிய சில நாளைக்கெல்லாம் சாலையில் அஜாக்கிரதையாக நடந்து செல்லுபவர்கள் எண்ணிக்கை வெகுவாகக்குறைந்து விட்டது!

—ப. கந்தசாமி

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

''அதை இங்கு ஏன் கொண்டு வரவில்லை?''

இந்தச் சமயத்தில் ராணி நகைத்தான். ''வில்வர்! சிந்து துர்க்கத்தின் அருகில் எந்தக் கப்பலும் வர முடியாது. 380 பீரங்கிகளை உடைய காஸண்ட்ராவும் அதற்கு விலக்கல்ல. எந்தக் கப்பல் இந்தத் தீவுக் கோட்டையை நெருங்கினாலும் எங்கள் பீரங்கிகள் கப்பலைச் சுக்கு நூறாக்கி விடும்'' என்றான் நகைத்துக் கொண்டே. அடுத்த விநாடி அவன் குரலில் நகைப்பு மறைந்து கண்டிப்பு தெரிந்தது. கண்களில் பயங்கர தீட்சண்யம் ஒளி விட்டது. உதடுகள் திடமாக அசைந்தன. ''யாரும் இந்தத் தீவை விட்டு வெளியேற முயல வேண்டாம், நான் அனுமதி கொடுக்கும் வரை'' என்றும் அதிகாரத் தோரணையில் கூறினான் ராணி.

அப்பொழுது வில்வர் தனது கையிலிருந்த கைத் துப்பாக்கியைச் சற்று எழுப்பினான். ''புட் தட் கன் அவே வில்வர், நோ ட்ரிக்ஸ் இங்க்லண்ட்.'' (உன் துப்பாக்கியை அகற்று வில்வர். இங்க்லண்ட் நீயும் விஷமம் ஏதும் செய்யாதே) என்று அனந்தின் குரல் கடுமையாக எழுந்தது. வில்வர் ஓரக் கண்ணால் அனந்தைக் கவனித்தான். அனந்தின் கைத் துப்பாக்கி ஏதோ விளையாட்டுக் கருவிபோல் தன்னையும் இங்க்லண்டையும் நோக்கி அனாயாசமாக உலாவுவதைக் கண்டான்.

(தொடரும்)

# பால் வார்த்தால்..

ஜி.கே.பொன்னம்மாள்





ரோடு லைட்டு எரிந்தது. மணி ஆறு ஆயிற்று. கருமாயி குடிசைக்கு வெளியே வந்து பார்த்தாள். அடுப்பில் உலைநீர் வைத்தாயிற்று. கொதித்துக் கொண்டிருக்கிறது. கணவர் வந்தால் பணம் வாங்கிக் கொண்டு பக்கத்துக் கடையிலிருந்து அரிசி வாங்கிச் சோறாக்கலாம். தண்ணீர் இப்படி வீணாகக் கொதித்துக் கொண்டிருந்தால் விறகு செலவாகும். எல்லாவற்றையும் அளந்துதானே செலவு பண்ண வேண்டியிருக்கிறது.

ரோட்டு ஓரம் வரையும் பார்த்தாள் கணவனைக் காணவில்லை. குழந்தைகள் இரண்டும் பசியில் அழுது கொண்டே இருக்கிறது. இந்தப் பச்சைப் பாம்பு மாதிரி ஒரு நோஞ்சல் பாம்பை வைத்துக் கொண்டு ஒவ்வொரு வீட்டு வாசலிலும் கழுத்து நரம்பு புடைக்க மகுடி ஊதினால் ஐந்து பைசா பத்துப் பைசா போடவே தயங்குறாங்க. இதாலே எப்படி ஒரு குடும்பத்தைக் காப்பாற்ற முடியும்?

பக்கத்து வீட்டு நாகனும் பாம்பாட்டிதான். அவனும் பாம்பை வைச்சுத்தான் தொழில் நடத்துறான். சினிமாவுக்குப் பாம்பைக் கொடுக்கிறான். படப் பிடிப்புக்குக் கார் வந்து அழைத்துப் போகிறது. நல்ல பாம்பா மூணு வைச்சிருக்கான். சினிமாக் கம்பெனியிலே நல்ல ஊதியம். எத்தனையோ படத்திலே நாகனின் பாம்பு நடிச்சுடுச்சு. அவன் வீட்டிலே நல்ல சாப்பாடு. நல்ல துணிமணிகள். பாம்புக்கு மட்டும் தினசரி ஒரு டஜன் முட்டை வாங்குறான். குடிசைக் குள்ளே கட்டில், டிரான்ஸிஸ்டர், நாற்காலி, எவர்சில்வர் பாத்திரங்கள் எல்லாம் இருக்கு. எதற்கும் அதிர்ஷ்டம் வேணும்.

இப்படியெல்லாம் யோசித்துக் கொண்டிருந்ததால் மேலும் பத்து நிமிஷம் போயிற்று. பேசாமல் குடிசைக்குள் வந்து அடுப்பை அணைத்து விட்டு ஒரு மூலையில் படுத்துவிட்டாள். குழந்தைகளும் அழுது ஓய்ந்து தூங்கிப்போய் விட்டிருந்தன.

''தே, என்ன புள்ளே இது! குடிசைக் கதவைத் திறந்து போட்டுக்கிட்டுப் படுத்திருக்கே. எவனாவது திருடன் வந்து இருக்கிறதையும் தூக்கிட்டுப் போனா என்ன செய்வே?'' ரங்கன் குரல் கொடுத்துக் கொண்டே வந்தான்.

''ஆமா எடுத்துக்கிட்டுப் போகத் தங்கமும் வைரமும் இறையுதுபாரு ஊட்டிலே. ஓட்டைச் சட்டியும், தொடப்பைக் கட்டையும்தான் இருக்கு'' என்றாள் கருமாயி கோபத்துடன்.

ரங்கன் ஆயாசத்துடன் பாம்புக் கூடையைக் கீழே வைத்துவிட்டுப் பையிலிருந்து நாலு பன்களை எடுத்து வெளியே வைத்தான்.

''கருமாயி.... இன்னிக்கு வெயில் பூராச் சுத்தினேன். கிடைச்சது ஒரு ரூபா. நாலு பன் வாங்கி வந்திருக்கேன். நாலு டீ வாங்கிக்கலாம். அரைக் கிளாஸ் பால் பாம்புக்கு. இத்தனைதான் முடியும். இன்னைக்கு முழிச்ச முகம் அப்படி. சோத்துக்குக் கூட வழியில்லே.... உம்'' என்றான்.

''ஒன்னை நம்பி உலையிலே தண்ணி வச்சேன் பாரு. என் புத்தியைச் செருப்பாலே அடிக்கணும். ஆமா, கேக்கறேன். சம்பாதிக்க வக்கில்லாத உனக்கெல்லாம் எதுக்குக் கல்யாணமும், குழந்தை குட்டிங்களும்?''




கோபத்தால் கொதித்தெழுந்தாள் கருமாயி.

''என்ன சொன்னே? ஒரு பொம்பளை பேசற பேச்சா இது? எத்தனை ஆணவம் இருந்தா இப்படிப் பேசுவே. மரியாதையா நடந்துக்க. குழந்தைகளை எழுப்பி இந்தப் பன்னைக் குடு. ஊ, வாங்கியாறேன்'' என்றான் ரங்கன்.

''நான் சொன்னது மட்டும் ரோசம் பொத்துக்கிட்டு வருதே — பசங்க வேற சோறு சோறுன்னு கேக்குது. பக்கத்து ஊட்டிலேயும் டாம்டை வச்சுத்தான் பொளைக்கிறாங்க. எத்தனை நல்லாக் குடித்தனம் பண்ணுறாங்க? நீ இப்படித் தெருவைச் சுத்தறதை வுட்டுட்டு ஒரு சினிமாக் கம்பெனியிலே போய் வேலை வாங்கிக்கன்னு சொன்னாலும் கேக்க மாட்டேங்குறே. எல்லாத்துக்கும் குடுத்து வச்சிருக்கணும். நான் இந்தப் பன்னைப் பசங்களுக்குக் குடுக்க மாட்டேன். அவுங்க அப்பன் சோறு போட வக்கில்லாதவன் என்று அதுங்க தெரிஞ்சுக்கட்டும்'' என்றாள் ஏளனமாக.

ரங்கனுக்கு வந்த கோபத்தால் அவள் தலைமயிரைப் பிடித்து இழுத்து முதுகில் நாலு அறை வைத்தான். ''சீ கழுதை! எத்தனை திமிர் இருந்தா இப்படிப் பேசுவே. ஏதோ ஆண் பிள்ளை வெளியே போய் அலைஞ்சு திரிஞ்சு வர்றானே என்கிற எண்ணமில்லாமே அடமா பண்ணறே? ஒன்னைத் தொலைச்சுப்பிடறேன் பாரு'' என்று மேலும் இரண்டு உதை விட்டான்.

ஐய்யோ முறையோ என்று அழுதாள் கருமாயி. பக்கத்துக் குடிசையிலிருந்து எல்லோரும் ஓடிவந்தார்கள். ''அட அடிக்காதேப்பா'' என்று ரங்கனைப் பிடித்து இழுத்தார்கள்.

சில்க் ஜுப்பியும் வலைப் பனியனும் வாயில் சிகரெட்டுமாக நாகனும் ஓடி வந்தான். ''இங்கே வா, ரங்கா! நாம பேசிக்கலாம். பொம்பளையை அடிக்காதே'' என்று தன் குடிசைக்கு இழுத்துப் போய்விட்டான்.

''அய்யே! அழுவுறதைப் பாரு. வெளியே போய் வந்த புருஷனுக்கு இதமா ரெண்டு வார்த்தை சொல்லத் தெரியாத நீயும் ஒரு பொம்பளையா? இப்படி அடிபட்டுச் சாகறது நல்லதில்லே! ஆம்புள்ளைங்கல்லாம் ஊட்டுக்கு வேண்டித்தான் நாள் பூரா உழைக்குறாங்க. ஆனா அவுங்களுக்கு வர வருமானம் பானை புடிச்சவ பாக்கியத்தைப் பொறுத்திருக்கும். இதைத் தெரிஞ்சுக்காமெ என்னமோ ஆட்டம் போடுறியே. பொளைக்கத் தெரியாதவளா இருக்கியே!'' பக்கத்துக் குடிசைக் கிழவி வசைமாரி பொழிந்தாள்.

அடிபட்ட உடல் வலியை விட மனம் அதிகமாக வலித்தது கருமாயிக்கு. தவறு தன்னிடம்தானே? அவனுக்கு மட்டும் குழந்தைகளுக்கு வயிறு நிறையச் சோறு போடணும்னு ஆசை இருக்காதா என்ன? கிடைத்த காசுக்கு வாங்கி வந்த பன்னைக் கூட அலட்

சியம் பண்ணினேனே. அவருக்குக் கோபம் வந்தது நியாயம்தானே? கிழவி சொன்ன தெல்லாம் உண்மையான வார்த்தை.

''இந்தா கருமாயி! குழந்தைங்களுக்குப் போடு'' என்று ஒரு தட்டில் சோறும், வெங்காயக் குழம்பும் கொண்டு வந்து கொடுத்தாள் பக்கத்துக் குடிசை ராக்காயி.

''இந்தா பொண்ணே! ராவைக்குத் தோசை சுட்டேன். நாலு கொண்டு வந்தேன். புருஷனுக்குக் குடுத்து அவனைச் சமாதானம் பண்ணு முதல்லே'' என்றாள் பக்கத்து வீட்டுக் கிழவி. ஆகச் சாப்பாடு வந்துவிட்டது.

நாகனும் ரங்கனை உபசரித்துக் கொண்டிருந்தான். ''ரங்கா முதல்லே கையைச் சாப்பிடு. இரண்டு சப்பாத்தி துண்ணு. பிறகு பேசிக்கலாம்.'' என்றான். சப்பாத்தி குருமா தட்டில் வந்தது. ரங்கனுக்குத்தான் சாப்பிடப் பிடிக்கவில்லை.

'அநியாயமாக் கருமாயியை அடித்துவிட்டோமே. அவள் சொன்னதில் என்ன தவறு? நமக்குப் பிழைக்கத் தெரியவில்லை. நாகன் எத்தனை புத்திசாலி, கைநிறையச்-சம்பாதிக்கிறான். நல்லாச் சாப்பிடுறான். நம்மைப் போல்...?' நினைவில் மூழ்கிப் போனான் ரங்கன்.

நாகன் பேச்சை ஆரம்பித்தான். ''ரங்கா! நீ எனக்கு ஓர் உதவி பண்ணனும். என் கிட்டே மூணு பாம்பு இருக்குது. நாளைக்கு ஒரு கலர்ப் படம். அதுவும் இந்திப் படம். ரெண்டு பாம்புக்கும் வேலை இருக்குது. இன்னொரு பாம்புக்கு ரெண்டு நாள் முந்தி படப் பிடிப்பின்போது அந்த ஹீரோயின் அம்மா ரொம்பப் பயந்திட்டாங்க. அதுக்காக வாயை ஊசி நூலால் தையல் போட்டிருந்தேன். இரவு பத்து மணி வரையிலே படப் பிடிப்பு நடந்தது. அது என்னமோ தையலைப் பிரிக்கும்போது வாய் புண்ணாகிவிட்டது. லேசா ரத்தமும் சீயும் வந்துக்கிட்டிருக்கு. டாக்டர்கிட்டக் காட்டி மருந்து போட்டிருக்கேன். அது ஒண்ணும் சாப்பிட மாட்டேங்குது. பாரேன்'' என்று ஒரு பாம்புக் கூடையைத் திறந்தான் நாகன். பளபள வென்று ஒரு கருநாகம் சுருண்டு முடங்கிக் கொண்டிருந்தது. அதன் வாய் புண்ணாக இருந்தது. தட்டில் ஒரு முட்டையை உடைத்து ஊற்றிப் பாம்பருகே கொண்டு வைத்தான். பாம்பு தட்டருகே முகத்தைக் கொண்டுவந்துவிட்டுத் திருப்பிக் கொண்டது.

---

எதிரி என்பவர்,
நம்மை வெறுப்பவர் அல்ல;
நாம் யாரை
வெறுக்கிறோமோ
அவர்தான்.

— [illegible]
— [illegible]



''பார்த்தாயா, அதுக்குச் சாப்பிட முடியலை'' என்று கூடையை மூடினான் நாகன். ''இந்தா இந்த முட்டையை உன் பாம்புக்குக் குடு. நாளைக்கு ஒரு வாடிக்கை கம்பெனிலேந்து, பாம்பு வேணும்னு கேட்டு வருவாங்க. எங்கிட்டப் பாம்பு இல்லே. நீ ஒன் பாம்பைக் கொண்டுபோ. நூறு ரூபாய் குடுப்பாங்க. இருபத்தி அஞ்சு ரூபா முன் பணம் வாங்கித் தரேன். ஒண்ணு வாடிக்கை விட்டுப் போகக் கூடாது பாரு. செய்வியா?'' என்றான்.

''நாகண்ணே! என் பாம்பு ரொம்ப மெலிஞ்சு கிடக்கே? அதையும் தவிர எனக்கு ஸ்டுடியோ, படப் பிடிப்பு ஒண்ணுமே தெரியாது'' என்றான் ரங்கன்.

''அதெல்லாம் கவலைப்படாதே. நம்ப சிஷ்யப்புள்ளே பக்கிரியை அனுப்புறேன். படப் பிடிப்பிலே பாம்பு கிட்டே அவன் வேலையை வாங்கிக்குவான். அவன் கையிலே ஒரு அஞ்சு ரூபாவைக் கொடு. காலை எட்டு மணிக்குக் கிளம்பணும். ரெடியா இரு. இந்தா இந்த முட்டையைப் பாம்புக்குக் குடு. ஏலே பக்கிரி, வாடா இப்படி. நாளைக்கு நீயும் அண்ணனோட படப்பிடிப்புக்குப் போ. என்ன'' என்றான் சிஷ்யனிடம்.

நூறு ரூபாய் என்றதும் ரங்கனுக்கு ஒரு சபலம் ஏற்படத்தான் செய்தது. துணைக்குப் பக்கிரியும் வருகிறான் என்ற துணிச்சலும் எழுந்தது. மெதுவாகக் குடிசைக்கு வந்தான். பாம்புக் கூடையைப் பிரித்துப் பார்த்தான். பாம்பு முட்டை வாசனை பட்டதும் தலையைத் தூக்கி தட்டிலிருந்த முட்டையை லபக் லபக் என்று நக்கிச் சாப்பிட்டது.

கருமாயிக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை. தன் கணவனும் ஸ்டுடியோவுக்குப் போகப் போகிறான். மேலும் மேலும் சான்ஸ் கிடைத்தால் வசதியாகச் சாப்பிட்டு நன்றாக வாழலாம்; குழந்தைகளைப் படிக்க வைக்கலாம் — இப்படியெல்லாம் ஓடியது அவள் சிந்தனை.

ஸ்டுடியோவுக்குள் நுழைந்ததும் ரங்கனுக்குப் பயமாக இருந்தது. முன் பின் தெரியாதவர்கள் நடமாட்டமும் புதுச் சூழ்நிலையுமாகத் தொண்டையை அடைத்துக்கொண்டது ரங்கனுக்கு. ''அண்ணே! டைரக்டர் கேட்டா இது ஒங்க பாம்புன்னு சொல்லாதிங்க. நாகன் பாம்புன்னே சொல்லுங்க'' என்றான் பக்கிரி.

சற்று நேரத்துக்கெல்லாம் ஆபீஸ் பாய் ஒரு பொட்டலத்தில் நாலு இட்லியும் இரண்டு வடையும் காப்பியும் கொண்டுவந்து கொடுத்தான். ''தம்பீ ஒரு கட்டுப் பீடி கூட வேணும்பா'' என்றான் பக்கிரி.

''ஆகட்டும். குடுக்காட்டி நீ பாம்பை விட்டுப் பயமுறுத்துவியே'' என்று சிரித்தான் பையன்.

பக்கிரிக்கு ஸ்டுடியோவில் எல்லோரையும் தெரியும். தெரிந்திருந்தது. டாரிடமெல்லாமோ, ''அண்ணே வணக்கம், சார் நமஸ்காரம்'' என்று பேசினான்.

கப்பல் போன்ற ஒரு காரில் தந்தப் பதுமை போல வந்து இறங்கினாள் பிரபல நடிகை அசிதா தேவ். ''அதோ பாரு ரங்கா!



திமிங்கலத்தின் நீளம் நூறு அடி. எடை 140 டன். குட்டி பிறந்ததும் தாயின் நீளத்தில் பாதி நீளம் இருக்கும். கருப்பையில் ஒரு அவுன்சில் லட்சத்தில் ஒரு பங்காக இருந்த குட்டி 22½ மாதத்தில் 29 டன் நிறையாக வளரும். அதாவது 3000 கோடி மடங்காக வளர்கிறது.

✻



பட்டுப் பூச்சி மோப்ப சக்தியில் தலை சிறந்தது. அது ஆகாயத்தில் 608 மைல் தூரத்திலுள்ள தன் பெட்டையின் பாலுணர்வு சமிக்ஞைகளை நன்கு அறிந்து கொள்ளும்.

தொகுப்பு:
—அ. இராமச்சந்திரன்.

---

அந்தா தேவி வந்தாச்சு'' என்றான் பக்கிரி.

''அண்ணே, 'பணமோ பிணமோ' என்ற படத்தில் நடிச்சவங்களா?'' என்றான் ரங்கன்.

'ஆமா, அவங்கதான் இன்னிக்கு நடிக்கப் போறாங்க. உன் பாம்போட'' என்றான் பக்கிரி.

ரங்கன் வாயைப் பிளந்த வாறு பார்த்துக் கொண்டிருந்தான்.

மணி பத்து ஆயிற்று. புரொடக்ஷன் மானேஜர் வந்தார். ''பக்கிரி, இந்தா முட்டை, பாலு எல்லாம் கொடுத்து ரெடி பண்ணு பாம்பை. அம்மா மேக்கப் முடிச்சாச்சு. டைரக்டர் பாம்பைப் பார்க்கணு மாம். அம்மாவுக்கு ரொம்பப் பயமாம். பாம்பின் வாயைத் தச்சுடு. ஜாக்கிரதையாகப் பாம்பை விடு. புரியுதா?'' என்றார்.

''சரிங்க. எல்லாம் நான் கவனிச்சிக் கறேன். நீங்க கவலைப்படாதீங்க'' என்றான் பக்கிரி. ரங்கனுக்குத் திக்கென்றது. பாம்பின் வாயைத் தைக்கணுமாமே? ஐயோ! அதுக்கு வலிக்குமே....

''அண்ணே பாம்பை எடு. இந்தா, முட்டை, பாலு குடு. என்ன இனிமே படப் பிடிப்பு முடிஞ்சதான் அது வாயைத் திறந்து ஏதாவது சாப்பிட முடியும்'' என்றான் பக்கிரி.

ரங்கனுக்கு மனத்துக்குள் ஏதோ சங்கடம் செய்தது. கூடையிலிருந்த பாம்பு கூடையைத் திறந்ததும் நெளிந்தது. முட்டையும் பாலும் காணாதது கண்டது போல் மடக் மடக்கென்று சாப்பிட்டது.

பக்கிரி இரண்டு முழம் கறுப்பு நூலை எடுத்து ஊசியில் கோத்து வைத்துக்கொண்டதைப் பார்த்த ரங்கனுக்குத் திக்கென்றது. பாம்பைக் கையில் எடுத்தான் பக்கிரி. கொஞ்சம் கூடத் தயவில்லாமல் அதன் வாயை இடது கையால் அழுத்திப் பிடித்துக் கொண்டு ஊசியால் மடமடவென்று தையல் போட்டான். பாம்பு வலியில் நெளிந்து வளைந்தது. பக்கிரியின் இரும்புப் பிடியிலிருந்து அதனால் விடுபட முடியவில்லை. ரங்கனுக்குக் கண்ணில் நீர் வந்துவிட்டது.

''பக்கிரி, வா அப்பா செட்டுக்கு. அம்மா வந்தாச்சு. கொண்டா உன் பாம்பை'' என்றார் புரொடக்ஷன் மானேஜர்.

செட்டுக்குள் நுழைந்ததும் ரங்கனுக்குப் பிரமிப்பாக இருந்தது. ஒரே விளக்கு மயம். நடிகை தயாராக இருந்தாள்.

''இந்த அம்மா இப்படிப் படுத்திருப்பாங்க. பாம்பு இந்த வழியா வந்து அவுங்க காலைக் கடிக்கணும். அவ்வளவு தான்'' என்றார் டைரக்டர்.

பக்கிரி ஒரு முட்டையை உடைத்து பாம்பு போக வேண்டிய இடத்தில் வரிசையாகக் கொட்டினான். கூடையிலிருந்து பாம்பை எடுத்து வெளியே விட்டான். பாம்பு வாயில் தையல் போட்ட வலியில் மறுபடியும் சுருண்டு கொண்டது. பக்கிரி அதைக் குச்சியால் குத்தியும், வாலைப் பிடித்துத் தூக்கியும், கழுத்தைப் பிடித்து முட்டை உடைபட்டுக் கிடந்த இடத்தில் வைத்தும் சித்திரவதை செய்தான். அதைப் பார்க்கவே பரிதாபமாக இருந்தது ரங்கனுக்கு. ஆனால் நூறு ரூபாயை நினைக்கக் கொஞ்சம் தெம்பாக இருந்தது. வெளிச்சத்தைப் பார்த்துப் பழக்கப்படாத பாம்பு காமிரா ஓட ஆரம்பித்ததும் கூடைக்குள் போய் முடங்கியது.

''என்னப்பா இந்தப் பாம்பு இப்படி பிளிமைச் சாப்பிடுது? கூடையை விட்டு வெளியே வரமாட்டேன் என்கிறதே'' என்றார் டைரக்டர்.

''ரெடி, ரெடி சார். இந்த வாட்டி ஓ.கே. ஆகிவிடும்'' என்றான் பக்கிரி போலி உற்சாகத்துடன்

இரவு எட்டு மணி வரையில் படப் பிடிப்பு நடந்தது. பாம்பை எத்தனையோ இம்சை பண்ணி ஒருமட்டில் ஷாட் எடுத்து முடித்தார்கள். ரங்கனுக்குப் போதும் போதும் என்றாகி விட்டது. 'வரும்போது பக்கிரியும் ''போதும்பா! உன் பாம்பு ரொம்பத் தொந்தரவு குடுத்துடுத்து. அடுத்த படத்துக்கு நிச்சயம் வேண்டாம்னுவாங்க'' என்றான்.

வீட்டுக்கு வரும்போதே பாம்பை இனிமேல் இப்படியெல்லாம் படப் பிடிப்புக்கு அனுப்பக் கூடாது. தான் வளர்த்த பாம்பு—அது சோனியோ சின்னதோ — அதைச் சித்ரவதை பண்ணுவதைப் பார்த்துக் கொண்டிருக்க முடியாது. நாகனுக்கு இந்தத் தொழில் சரி. ஒவ்வொருத்தருக்கு ஒவ்வொரு விதத்தில் ஆண்டவன் படி அளக்கிறான். நமக்கு இந்த விதத்தில் அல்ல என்று நினைத்துக் கொண்டான். தையல் பிரித்த பின்னும் பாம்பு வாயைத் திறக்கவோ பாலைக் குடிக்கவோ செய்யவில்லை. அத்தனை வலி. பாம்பின் உடலில் இரண்டு மூன்று இடத்தில் பக்கிரியின் கை நகம் பட்டு லேசாகக் கறி ரத்தம் கசிந்து கொண்டிருந்ததைப் பார்க்க ரங்கனுக்கு அழுகை வந்தது.

இனிமேல் இந்தச் சினிமா ஆசையே வேண்டாம். கூடவோ குறைச்சலோ பாம்பை வைத்து மகுடி ஊதிக் கிடைக்கிற காசில் நிம்மதியாக வாழலாம் என்று முடிவெடுத்துக் கொண்டான். கருமாயியும் அதற்கு ஒப்புக்கொண்டாள். பாம்பு போலவே அவள் கரங்கள் அவன் கழுத்தைச் சுற்றி வளைத்து ஆறுதல் கூறின.

# நான் கண்ட ரஷ்யா

## அகிலன்

"நீங்கள் இங்குள்ள இளம் பயனீர் மாளிகைகளை, பயனீர் விடுதிகளை, பயனீர் முகாம்களைப் பார்த்திருக்கிறீர்களா? நம்முடைய நாட்டிலும் மாநிலத்துக்கு மாநிலம் சில பயனீர் மாளிகைகளை நாம் ஏற்படுத்தினால், கட்டாயம் நாடு தீவிரமாக முன்னேறிவிடும் — இது என் முக்கியமான யோசனை'' என்றார்.

டாக்டர் காந்தி நாட்டுப் பற்று மிகுந்தவர். உலக நாடுகளிடையே நாமும் தலை நிமிர்ந்து நிற்க வேண்டும் என்று ஆசைப்படுபவர்.

அவர் எந்தப் பயனீர் மாளிகைகள் நம் நாட்டுக்குத் தேவை என்றாரோ, அதை நான் 1973ம் ஆண்டே தாஷ்கண்டில் கூர்ந்து கவனித்திருக்கிறேன். அரை நாளுக்கு மேல் அங்கு செலவிட்டு அதன் அற்புதங்களைக் கண்டிருக்கிறேன்.

பத்துப் பன்னிரண்டு வயதில் உள்ள ஆண் குழந்தைகளும் பெண் குழந்தைகளும் அதில் சேர்த்துக்கொள்ளப்படுகிறார்கள். பள்ளி நேரம் போக, அவர்களுடைய ஓய்வு நேரத்தை, அந்தந்தக் குழந்தைகளின் ஆர்வத்துக்கும், ஆற்றலுக்கும் தக்கபடி, எழுத்து ஓவியம், ஆடல், பாடல், விஞ்ஞானக் கண்டுபிடிப்பு, புகைப்படக் கலை, உழவுத் தொழில் ஆராய்ச்சி என ஏதேனும் அவர்களுக்குப் பிரியமான பயிற்சிகளில் திருப்பி விடுகிறார்கள். அவர்களுடைய ஓய்வு நேரப் பயிற்சிக்கான எல்லாப் பொருள்களையும் அவை எவ்வளவு உயர்ந்தவையாக இருந்தாலும், அரசே தன் செலவில் வாங்கித் தருகிறது. தாஷ்கண்ட் பயனீர் மாளிகையில் நான் ஓவியக் கூடம், நடன அரங்கு முதல் விஞ்ஞானக் கூடத்தில் பறக்கும் சிறு விமானங்கள், நீரில் போகும் சிறு கப்பல்கள், இயங்கும் ராக்கெட்டுகள் எனப் பல இயங்கும் மாடல்களைப் (Working Models) பார்த்தேன்.

பயனீர் மாளிகைகளைத் தலைமையகங்கள் என்றால், பயனீர் விடுதிகள், பயனீர் முகாம்கள் போன்றவை நாடு முழுவதிலும் பரவிக் கிடக்கும் ஓய்வு நேரக் கலைக் கூடங்களாகும். குழந்தைகளின் தனித் தன்மைக்கேற்ற ஆற்றல்களை இந்த நிலையங்கள் வளர்த்து விடுகின்றன. அவர்களைத் தேசப்பற்று மிக்கவர்களாகவும் உழைப்பாளர்களாகவும் எதிர்காலத் தலைமைப் பொறுப்புக்களை ஏற்கக் கூடியவர்களாகவும் உருவாக்கி விடுகின்றன.

நாங்கள் காணச் சென்ற தேசிய முக்கியத்துவம் வாய்ந்த இடங்களுக்கெல்லாம் நாட்டின் பல்வேறு பகுதிகளிலும் உள்ள இளம் பயனீர்களும் அழைத்து வரப்படுவதை நான் கண்டேன். அவர்களுடைய நாட்டின் கலாசாரம், வரலாறு, பண்பாடு, போராட்ட வாழ்க்கை ஆகியவை அவர்களுக்குக் கண்ணெதிரே காட்டப்பட்டு விளக்கப்படுகின்றன.

இத்தகைய சிறுவர்களும் சிறுமியர்களும் வளர்ச்சி பெற்று அந்த நாட்டின் பொறுப்பை ஏற்கும்போது அந்த நாட்டை உலகத்தின் எந்தச் சக்திதான் என்ன செய்துவிட முடியும்?

நம் நாட்டில், குணம், பண்பாடு படிப்பு, திறமைக்கான சான்றிதழ்கள் போன்றவை அரசாங்க வேலைக்கான நான்காம் பிரிவு ஊழியர்களுக்குக் கூடத் தேவைப்படுகின்றன. Certificate of Character, Conduct and educational Qualification.

ஆனால் நாட்டு மக்களின் தலைவிதியை நிர்ணயிக்கும் அரசியல் பொறுப்பேற்கத்



✱ ருஷ்ய நாடகம்: உஸ்பெக் நாடகக்குழு நடத்தும் மிர்ஸா உலுப்பெக்கில் ஒரு காட்சி.



✱ விருது பெற்ற எழுத்தாளர் குழு மாஸ்கோ ஜார்ஜியன் ஓட்டலுக்கு முன்புறம். வலமிருந்து: வித்யாலங்கார், அகிலன், பிருத்வி சிங் ஆஜாத், ராமகிருஷ்ண பிள்ளை, திருமதி உதம் சந்தானி, கோஸ்வாமி.

✻ ருஷ்யாவில் பொதுஜன போக்குவரத்து சாதனங்கள் மிகுதி வசதியானவையும் கூட.

துடிப்பவர்களிடம் நாம் இவற்றையெல்லாம் எதிர்பார்ப்பதில்லை. ஒருசில இடங்களில் தீவட்டிக் கொள்ளைக்காரர்களை விடவும் மிக மோசமானவர்களைக் கூட நாம் நம் பிரதிநிதிகளாகத் தேர்ந்தெடுத்திருக்கிறோம்.

நம் நாட்டின் அடிப்படைப் பிரச்னைகள் பலவற்றுக்குக் காரணத்தை நாம் வேறு எங்கும் தேட வேண்டாம். ரஷ்யாவின் நாட்டின் பல்லாயிரம் துறைகளுக்கும் பொறுப்பு ஏற்க வேண்டியவர்களை இளம் பிராயத்திலிருந்தே உருவாக்கி விடுகிறார்கள். பெரும்பாலும் இளம் பயனீர்களிலிருந்துதான் அரசியல் தலைவர்களும் நிர்வாகத் தலைவர்களும் பல்துறை நிபுணர்களும் அங்கு உருவாகிறார்கள்.

இந்தியத் தூதரின் முதற் செயலாளர் டாக்டர் காந்தி பயனீர் மாளிகைகளைப் பற்றி நம் நாட்டு மக்களுக்கு எடுத்துச் சொல்ல வேண்டும் என்று கூறியதன் உண்மையை நான் புரிந்து கொண்டேன்: நம் நாட்டில் நாம் வருங்காலத்துக்காவது ஒழுங்கும் கட்டுப்பாடும், நாணயமும் திறமையும் கொண்ட தலைவர்களை உருவாக்க வேண்டாமா? நாட்டு மக்களின் நலனில் அக்கறை கொண்ட — தன்னல வெறியற்ற — பல்துறை நிபுணர்களைத்தோற்றுவிக்க வேண்டுமல்லவா?

மாலை நேரத்தில் சிறிது நேரம் செஞ்சதுக்கத்துக்கருகில் ஓடும் மாஸ்கோ நதிக்கரையில் உலாவினோம். இரவு ஏழு மணிக்கு போல்ஷா தியேட்டரில் கவிஞர் புஷ்கின் எழுதிய 'டுயல்' என்னும் ஒரு கவிதை நாடகம்: Opera. நாங்கள் நாடகத்துக்குப் புறப்பட்டோம்.

### 4. கவிதை நாடகம் — ரஷ்ய மொழித் திருக்குறள்

சென்ற இருமுறை வந்த போதும், தியேட்டரில் இடம் கிடைக்காத காரணத்தால் என்னால் போல்ஷா அரங்கில் எந்தக் கலை நிகழ்ச்சியையும் காண முடியவில்லை. இம்முறை நோவாஸ்ட்டி செய்தித் துறை அன்பர்கள் பல வாரங்களுக்கு முன்னதாகவே சொல்லி வைத்து இடம் ஒதுக்கியிருந்தார்கள். எங்களை



போலவே வெளிநாட்டுப் பயணிகளும் அங்கு மாஸ்கோ வாசிகளிடையே நிறைந்து காணப் பட்டனர்.

போல்ஷா தியேட்டர் நிகழ்ச்சி எதுவாக இருந்தாலும் அது ரஷ்யாவிலேயே தலைசிறந்த நிகழ்ச்சியாக இருக்கும் என்ற நற்பெயரைப் பெற்று விட்டது. அந்தப் பெயரைக் காப் பாற்றிக் கொள்வதில் அவர்களும் இதுவரை கவனமாக இருந்து வருகின்றனர். ஆகவே மாஸ்கோ நகர வாசிகளுக்கு அங்கே இடம் கிடைப்பது என்பது அவ்வளவு எளிதல்ல. பல வாரங்களுக்கு முன்பே மணிக்கணக்காக க்யூ வரிசையில் நின்று சீட்டுப் பெற வேண் டும்.

குதிரை லாடம் போல் அரை வட்ட வடி வில் அங்கே அரங்குகள் அமைக்கப்படுகின் றன. அடித்தளத்தைத் தவிர, சுற்றிலும் ஒன்றுக்கு மேல் ஒன்றாக ஆறு 'பால்கனி'கள். சுமார் இரண்டாயிரம் பேர் கொள்ளக்கூடிய அரங்கு அது.

'ஆபெரா' என்று சொல்லப்படும் அந்தக் கவிதை நாடகம் 150 ஆண்டுகளுக்கு முன்னால் கவிஞர் புஷ்கினால் எழுதப்பட்டது. கதைச் சுருக்கம் இதுதான்: ஒரு பிரபுவின் வீட்டுக்கு விருந்தினராக வருகிறார்கள் மற்றொரு பிரபு வின் குடும்பத்தைச் சேர்ந்த இரு இளைஞர்கள். அவர்களில் ஒருவன் அங்கு வேலை பார்க்கும் வேலைக்காரியின் மகளைக் காதலித்து, விரை விலேயே அவளை வந்து மணந்து கொள்வதாக வாக்களிக்கிறான். மற்றொருவனோ அந்தப் பிரபு குடும்பத்தைச் சேர்ந்த ஒரு பெண்ணையே காதலிக்கிறான். அந்த நண்பர்கள் இருவரும் திரும்பிச் சென்ற பிறகு, வேலைக்காரப் பெண் ணைக் காதலித்த இளைஞன், அவளை அறவே மறந்து விட்டுத் தன் நண்பனின் காதலியின் மேல் கவனத்தைத் திருப்புகிறான். இதனால் நண்பர்களுக்குள் பகைமை ஏற்படுகிறது. இரு வரும் வெஞ்சினம் கூறி, ஒருவரை ஒருவர் துப் பாக்கியால் குறிபார்த்துச் சுட்டுக் கொள்ளும் 'டுயலு'க்குச் சபதமிடுகிறார்கள். வேலைக் காரப் பெண்ணை முதலில் காதலித்தவன், தன் நண்பனைச் சுட்டுக் கொன்று விடுகிறான். ஆனால் அதன் பிறகு அவனால் காதலிக்கப் பட்ட இரு பெண்களுமே அவனை மறுத்து விடுகிறார்கள்.

மிகச் சாதாரணமான காதல் நாடகம் போல் இது தோன்றினாலும், கவிஞர் புஷ்கி னின் சொந்த வாழ்க்கையிலிருந்து பிறந்த உயிர்த் துடிப்புள்ள நாடகம் இது. அவரது மனைவியின் தங்கை கணவன் அவர் மனைவி யைப் பற்றி ஊரெல்லாம் அபவாதம் கிளப்பி னான். அதைப் பொறுக்காத புஷ்கின் அவ னோடு 'டுயலு'க்கு வெஞ்சினம் கூறினார். அதன் காரணமாக அவனால் சுட்டுக் கொல்லப் பட்டுத் தமது இளம் பிராயத்திலேயே உயிர் நீத்தவர் அவர். அவருடைய சொந்த வாழ்க் கையின் பிரதிபலிப்பான அந்த நாடகம், பிரம்மாண்டமான முறையில் — கண்ணையும் கருத்தையும் கவரும் வகையில் — தயாரிக்கப் பட்டிருந்தது.

முதற்காட்சிக்குத் திரை விலகியதும், ஒரு அடர்ந்த காட்டுக்குள் நடு மாளிகையின் முகப் பில் நாங்கள் இருப்பது போன்ற பிரமை தட் டியது. மேடைக்குள்ளே நெடிதுயர்ந்த நூற் றுக்கணக்கான பர்ச், ஓக் முதலிய மரங்கள் செறிந்த ஒரு காடு. காட்டுக்குள் தொலைவி லிருந்தும், பக்கவாட்டிலிருந்தும் மரங்களுக் கிடையே ஐம்பது அறுபது மனிதர் வந்து கொண்டிருந்தார்கள். மிகவும் உயரமான, நீண்ட அரங்கம் அது.

''அரங்கத்துக்குள்ளே ஒரு காட்டையும் மலைச் சாரலையுமே கொண்டு வந்து விட்டார் களோ?'' என்றேன் நான்.

''இல்லை! காட்டு மலைச்சாரலுக்குள்ளே இந்த அரங்கத்தையே கொண்டு வந்து விட் டார்கள்!'' என்றார் பிருத்வி சிங் ஆஜாத்.

காட்சிகள் மாறும் போது வசந்த காலக் காடு, குளிர்காலக் காடு, பனிப் பாலைவனம், பல நெடுந் தூண்களையும் மேல் மாடியை யும் கொண்ட பெருமாளிகை, இப்படி வெவ்வேறு இடங்கள் அரங்கத்தில் இடம் பெற்றன. சுமார் நூறு பேர்களை அரங்கத்தில் கொண்ட சூழ்நிலைக் காட்சிகள் ;நடனங்கள். நம்முடைய திரை உலகில் முழுத்தளம் — Full Floor — அமைத்து, பிரம்மாண்ட மான காட்சிகளைப் பல நாள் பாடுபட்டுப் படப்பிடிப்புக்காக அமைப்பார்கள். அங் கேயோ அரை மணி நேரத்துக்கு ஒருமுறை முழுத்தளக் காட்சிகள் மாறிக் கொண்டு வந்தன.

மொழி தெரியாததால் புஷ்கினின் கவிதை இன்பத்தைச் சுவைக்க எங்களால் முடிய வில்லை. நாடகம் பார்த்த மாஸ்கோவாசிகள் அடிக்கடி கரவொலி எழுப்பி ரசித்ததைக் கண்டு, கவிதை நாடகத்தை அவ்வளவு ஆர்வத்துடன் பாராட்டும் அவர்களுடைய ரசிகத் தன்மையின் வளத்தை ஒருவாறு என்னால் உணர முடிந்தது. வாழ்நாளில் நான் தவற விடக் கூடாத ஒரு நிகழ்ச்சியாக — மறக்க முடியாததாக — அந்த நாடகம் அமைந்தது.

நாடகம் முடிந்து வெளியே வரும் போது இரவு பத்து மணிக்கு மேலாகி விட்டது. டாக்ஸிகளுக்காகக் காத்து நின்றோம். கூட்ட மாக நடைபாதையில் சென்ற மாஸ்கோ



வாசிகளில் ஒருவர் மட்டும் குடி போதையில் தடுமாறிச் சென்றதையும், அவருடைய நண்பர் ஒருவர் அவருடைய கரத்தை இறுகப் பற்றி அழைத்துச் செல்வதையும் கவனித்தேன். தமிழ்நாட்டில் மதுவிலக்கு நீக்கப்பட்ட காலத்தில் நான் கண்ட காட்சிகளுடன் ஒப்பிட்டால் இது மிகச் சாதாரணம்தான்.

'ஓட்டல் லெனின் கிராடு'க்குத் திரும்பிய போதும் அங்கே இந்தக் குடி பிரச்னை குறுக்கிட்டது. ஓட்டலின் நெடுவாயிலை இழுத்து அடைத்திருந்தார்கள். எங்களால் உள்ளே நுழைய முடியவில்லை. நேரம் ஆகி விட்டதால் மூடித் தாழிட்டு விட்டார்களா? அப்படியென்றால் இரவெல்லாம் குளிரில் நடுங்கிக் கொண்டு வெளியில் நிற்க வேண்டியதுதானா? ஒன்றும் புரியவில்லை. எங்களைப் போலவே இருபது முப்பது பேர் வெளியில் ஐந்து நிமிஷங்களுக்கு மேல் காத்துக்கொண்டு நின்றோம். கடைசியாக ஒருவழியாகக் கதவைத் திறந்து எங்களை உள்ளே விட்டார்கள். கதவடைப்புக்கான காரணத்தைத் தெரிந்து கொள்ள முயன்றேன். ஓட்டலின் கீழ்ப் பகுதிக்குச் சாப்பிடுவதற்காக வந்த ஓர் உள் நாட்டுக்காரர், அளவுக்கு மீறிக்குடித்து விட்டு ஆர்ப்பாட்டம் செய்திருக்கிறார். அவர் தப்பி ஓடித் தெருவில் இடைஞ்சல் விளைவிக்காமல் இருப்பதற்காக அவரைப் பிடித்து ஓட்டல்காரர்கள் போலீஸில் ஒப்படைக்க முயன்றிருக்கிறார்கள். 'அவ்வளவுதான் விஷயம்.

கதவுக்கு இடதுபுறம் கீழ்த் தளத்திலிருந்த சாப்பாட்டு விடுதிக்குள் நுழைந்தேன். ஏதாவது கிடைத்தால் சாப்பிடலாம் என்று ஓர் எண்ணம். அங்கேயும் எதிர்பாராத ஒரு சிறு நாடகம் நடந்தது. அந்த நாடகத்தின் கதாநாயகர் ஓர் இந்தியர். வட இந்தியாவிலிருந்து வந்த ஏதோ ஒரு குழுவைச் சேர்ந்தவராக இருக்க வேண்டும். நாற்பது ஐம்பது வயதிருக்கலாம்.

நான் இந்தியன் என்பதைத் தெரிந்து கொண்டு என்னைத் தேடித் தட்டுத் தடுமாறி நடந்து வந்தார். அப்போதே குடிபோதை அவர் தலை உச்சிக்கு ஏறியிருக்க வேண்டும். அவர் முகம், கண்கள், தோற்றம் இவற்றைக் கவனித்த போது, அவர் உடலெங்கும் அப்போது இரத்தத்துக்குப் பதிலாக 'ஓட்கா' தான் ஓடிக் கொண்டிருக்க வேண்டுமென்று தோன்றியது. அவர் 'தன்னை மறந்த லயத்தனில்' எங்கோ உலவிக் கொண்டிருந்தார்.

''நீங்கள் இந்தியர்தானே?'' என்றார்.

''ஆமாம்.''

''எனக்கு ஓர் உதவி செய்ய வேண்டும்.''



பத்தொன்பது வயது இளைஞன் ஒருவன் கைது செய்யப்பட்டிருக்கிறான். ஆண் நர்ஸான இவன் பலரைக் கொன்றதாகக் குற்றம் சாட்டப்பட்டுள்ளான். எண்பது வயது முதல் நூறு வயது வரையிலான, தான் வேலை பார்க்கும் மருத்துவமனையில் தங்கி சிகிச்சை பெறும் நோயாளிகளை இவன் கொன்றிருக்கிறான். 'அவர்கள் படும் வேதனையை என்னால் தாங்கிக் கொள்ள முடியவில்லை' என்று காரணமும் சொல்லியிருக்கிறான். அவன் மீது கருணை காட்ட வேண்டும், அதிகமாகத் தண்டித்து விடக் கூடாது என்று அவனுக்காகப் பரிந்து வந்து பலர் கோர்ட்டாருக்கு விண்ணப்பித்திருக்கிறார்கள், ஸ்வீடனில்.

—ராகா

—ஆர். எம்.

---

அவருக்கு நான் அப்போது செய்யக்கூடிய உதவி, அந்த ஓட்டல்காரர்களிடம் சொல்லி, அவரையும் பிடித்துப் போலீஸில் ஒப்படைக்கச் சொல்ல வேண்டியதுதான்! ஒரு நிமிடம் அவர் அருகில் நின்றால் என் மீதே வாந்தி எடுத்தாலும் எடுத்து விடுவார் போலிருந்தது. அளவுக்கு மீறிப் போட்டிருந்தார்.

''இந்த ஓட்டல்காரர்கள் இன்னும் கொஞ்சம் எனக்குக் குடிப்பதற்குத் தர மாட்டேன் என்கிறார்கள். தயவுசெய்து பிராந்தியோ, ஓட்காவோ தரச் சொல்லுங்கள். தயவு செய்யுங்கள்...!'' என்று அரை குறை ஆங்கிலத்தில் என்னிடம் மன்றாடினார்.

அவரை நான் கோபமாக உற்றுப் பார்த்தேன். 'நீங்கள் இந்திய நாட்டு விருந்தினர் என்பதால் உங்களையும் அவரோடு போலீசுக்கு அனுப்பவில்லை. நீங்கள் இதற்கு அவர்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்' என்பது போல் அவரை விழித்துப் பார்த்தேன்.

''தயவு செய்து...'' என்று ஏதோ சொல்ல முயன்றார்; நா தடுமாறியது.

(தொடரும்)



அந்த ஊரிலுள்ள அத்தனை குப்பை மேடுகளும் அவனுக்கு அத்துபடி! தூக்கத்தில் எழுப்பிக் கேட்டாலும் எங்கே எத்தனை என்று கரெக்டாகச் சொல்லிவிடுவான் குப்பன். அவனது மொத்தக் குடும்பமே குப்பை மேட்டில் தானே உருவாகியிருக்கிறது! அவன் அவனது மனைவி, மற்றும் ஏழு பிள்ளைகள்! அவர்கள் பரம்பரைக்கே குப்பை மேடுதான் நித்திய வாசம். ஒரு குப்பை மேடு விடாமல் அலைந்து அலசி, இரும்புத் துண்டுகள் துணுக்குகள் பொறுக்குவார்கள். குடும்பம் முழுதும் இதில் ஈடுபடும். ஒரு நாள் முழுவதும் பாடுபட்டாலும் நிச்சயமாக ஒரு கோணி நிறையாது — அதைத் தூக்கிக்கொண்டு போய், பழைய இரும்புக் கடையில் எடைக்குப் போடுவான். கிலோ கால் ரூபாய், ஒரு நாளில் ஐந்தோ ஆறோ கிடைக்கும் — குடும்பம் நடக்கும். உழைப்புக்கேற்ற ஊதியம்—ஊதியத்துக்கேற்ற உணவு.

குப்பன் படுசாமர்த்தியசாலி. குப்பையில் பொறுக்கி ஜீவனம் நடத்தினாலும், அந்தத் தொழிலையும் ஒரு பந்தாவோடு செய்வான். அவன் தற்சமயம் காம்ப் அடித்திருப்பது ஓர் இண்டஸ்ட்ரியல் ஏரியாவில். அவ்வப்போது ஏதாவது 'ஸ்க்ரேப் அயர்ன்ஸ்' குப்பை மேடுகளுக்கு வந்து விழுந்து கொண்டுதான் இருக்கும். வெய்யில் மழை பார்க்க மாட்டான். கடைசிப் பிள்ளை மூன்று வயது ராஜு வரைக்கும் எல்லோரும் கூட வந்து பொறுக்கியாகவேண்டும். இருட்டும்போதுதான் வேலை நிறுத்துவான். சேர்ந்ததை மூட்டையாகத் தலையில் சுமந்து கொண்டு, ஆறு கிலோ மீட்டர் நடந்து வாடிக்கையான கடையில் எடைக்குப் போடுவான். அதுமாதிரி ஒரே கடை தான் என்றாலும், ஒவ்வொரு நாளும் முறுக்கி விரைத்துப் பேரம் பேசியே கொடுப்பான். இத்தனைக்கும் அந்தக் கடைக்காரன் வேண்டாமென்று சொல்லிவிட்டால், விற்க வேறு போக்கிடமில்லை! கடை முதலாளி இவனைத் திரும்பியும் பார்க்க மாட்டார்— கடையில் ஒரு பொடிப் பையன் உண்டு, அவனோடுதான் பேரம்.

''எலேய்...: அந்தச் சாவுக்கிராக்கி வந்திருக்கு பாரு, கவனி'' என்று அவனை 'அதரைஸ்' பண்ணிவிடுவார். அந்தப் பொடியன்தான், குப்பனுக்குச்சாமி, எசமான், மொதலாளி எல்லாம்!

பணம் கைக்கு வந்ததும் கடைசிப் பைசா வரைக்கும் செலவு செய்து — அதில் கிடைத்ததை வாங்கிக் கொண்டு விரைந்து திரும்பிவிடுவான் வீட்டுக்கு! (குப்பை மேட்டுக்கு). மனைவி சமைக்க, பிள்ளைகளோடு இருவரும் வட்டமாக அமர்ந்து, கிடைத்த மட்டுக்கும் தின்று, ஆனந்தமாகத் தூங்கி விடுவார்கள்.

குப்பன் இருப்பிடத்திலிருந்து கூப்பிடு தூரத்தில் ஒரு வீடு உண்டு. — அவர்கள் கண்



களுக்கு அது 'அரமனை!' எப்போதாவது பெரிய மழை புயல் என்றால் குப்பன் குடும்பத்தோடு அங்கே ஒதுங்குவான். வீட்டைச் சுற்றிப் பெரிய தோட்டம். அதில் ஒரு குடிசை. தோட்டக்காரன் அதில்தான் தங்குகிறான்-அவன் தயவில்தான் இவன் குடும்பம் உள்ளே அனுமதிக்கப்படுகிறது. தோட்டத்தில் 'வழவழ' சிமெண்ட் போட்ட நடைபாதை; போர்ட்டிகோ பிள்ளைகளுக்கெல்லாம் அதில் தூங்குவதென்றால் ஏகக் குஷி! 'வழவழான்னு எம்பூட்டு சம்முன்னு இருக்கு! சமயத்தில் இதில் படுக்கும் சுகத்துக்காகவே 'மழை வரவேண்டும்' என்று அப்பிள்ளைகள் வேண்டிக் கொள்வதும் உண்டு!

குப்பன் கேட்பான்: ''எம்மாம் பெரிய ஊடு! ஊட்டிலே நெறையப்பேரு இருப்பாங்களே...?''

''ஊம்! அய்யா, அம்மா, ரெண்டு புள்ளைங்க. அம்புட்டுதான்''. தோட்டக்காரனின் பதில்.

''அய்யா கலெக்கட்டரா, மந்திரியா?''

''இங்கே ஏதய்யா கலெக்டரும் மந்திரியும்? இது தொழிற்சாலை ஏரியால்லே. அய்யா ஸிவிலு இன்ஜினியரு.''

''இஞ்சி-நீரா? அப்போ... சம்பளம் ஐம்பது, நூறு இருக்கும், இல்லே?'' பெரிதாக ஊகித்து விட்டது போல் கேட்பான் குப்பன்.

''அடக் கஸ்மாலமே! ஐம்பது, நூறு? இப்ப புரமோஷன் வேறே ஆகியிருக்கு. மாசம் ஆயிரம் ரூபா சம்பளமாக்கும்!''

''ஆங்....!''

காலம் யாருக்காக நிக்கப் போகிறது?

ஒரு மாதம் ஓடிவிட்டது!

அன்று குப்பன் குடும்பம் நரி முகத்தில் தான் விழித்திருக்க வேண்டும். (குப்பை மேட்டில்தானே குடியிருக்கிறார்கள்; அந்த வானம். நரி முகத்தில் முழிக்கக் கூட சான்ஸ் உண்டே!) ஏதோ 'பாதுகாப்பு வார விழா' என்று சொல்லித் தொழிற்சாலையிலிருந்த 'கண்டான் முண்டான்' இரும்புச் சாமானெல்லாம் குப்பை மேட்டுக்கு வந்துவிட்டன.

குப்பனுடைய பெரிய ஆஸ்தி – மதிப்பிட முடியாத சம்பத்து–தொழில் கருவி–தொழில் மூலதனம்' எல்லாமே அவன் பத்திரமாகப் பேணிக் காக்கும் இரண்டு கோணிப் பைகள் தான். அந்த இரண்டு கோணிப் பைகளும் நிரம்பி வழிந்தன. – அதுவும் மத்தியானத்துக்குள்ளேயே!

குப்பன் மனக் கணக்குப் போட்டான். எப்படியும் நூறு கிலோ தேறும்; அப்பிடின்னு.. குறைஞ்சது இருவத்தைஞ்சு ரூவா. ஏ..: அம்மாடி! அவன் ஒரே நாளில் இவ்வளவு வருமானத்துக்கு ஆசைப்பட்டது கூடக் கிடையாது! குப்பனும் குப்பாயியும் ஆளுக்கொரு மூட்டையைத் தூக்கிக் கொண்டு கடைத் தெருவுக்குப் புறப்பட ஆயத்தமாயினர்.

''ஏ... புள்ளைங்களா! இன்னிக்கு ஒங்களுக்கு வேணுங்கறதைச் சொல்லுங்க, வாங்கியாந்துடறேன்; பூந்து ஆடிப்புடலாம்!''

''நைனா, எனக்குக் கம்மர்கட்டு''–கடைசிப் பையன் ராஜு. அவனுக்கு நினைவு தெரிந்த நாளிலிருந்து அவன் வாழ்க்கை லட்சியம் 'என்றாவது ஒரு நாள் கம்மர்கட்டைத் தின்றுவிட வேண்டும்' என்பதுதான்!



''நைனு எனக்கு ரிப்பனு.''

''நய்னு எனக்கு வட கறி.''

''எனக்கு ரப்பரு வளவி.''

''எனக்குக் கைக்கடியாரம்.''

''ஆங்... கைக்கடியாரமா? என்னலே சொல்லுறே!''

''ஆமா நய்னு! திருவிசாவிலே ஒத்தெ ரூவாய்க்கி வித்தான்; அது மாருதி....'' ரொம்ப'காஸ்ட்லி'யாகக்கேட்டுவிட்டோமோ என்று பையன் அரண்டே போனான்.

''அம்புட்டுத்தானு! ஆகட்டுமடா மவனே. அப்புறம்....''

''எனக்கு ஊதது...அதான் பீப்பீ....''

''எனக்குக் குச்சி முட்டாயி.''

தங்களது ஆசைக் கனவுகளை வெளியிட்டனர் அப்பிள்ளைகள்.

''நாங்க பெத்த புள்ளெங்களா, அல்லாத்தையும் வாங்கியாரேம் கண்ணுகளா...'' என்றவாறே கணவனும் மனைவியும் விரைந்து சென்றனர்.

கடைத் தெருவில் பெரிய அதிர்ச்சி!

''யார்ரா இவன்? இவ்வளவும் யாருக்கு வேணும்? சரி, சரி. ஒரு மூட்டை போட்டுட்டுப் போ...''

''அய்யய்யோ, சாமி சாமி. இம்மாங் கனம் எம்பாந் தொலவு தூக்கினு வந்திருக்கோம். ரெண்டையுமே....''

பேசி முடிப்பதற்குள் பொடியன் இடைவெட்டு வெட்டினான்.

''என்னடா இது பெரிய ரோதனையாப் போச்சு,''

குப்பாயி அவசரமாகச் சொன்னாள்.

''எசமான் எசமான், கூலோ இருவது பைசாவுக்கே தாரோம். பெரிய மனசு பண்ணி வாங்கிக்குங்க எசமான்.''

---

ஒரு பிரமுகர் வீட்டில் ஏதோ விசேஷம். வேலைக்காரர்கள் ஓய்வு ஒழிவில்லாமல் பரபர வென்று இயங்கிக் கொண்டிருந்தார்கள். பிரமுகர் அவர்களிடம் வந்தார். ''உங்களில் யாருக்கு இசையில் அதிக விருப்பம்?'' என்று கேட்டார்.

இந்த எடுபிடி வேலையிலிருந்து விடுபட்டால் போதும் என்று நாலுபேர் கை தூக்கினார்கள்.

''வாருங்கள்'' பிரமுகர் சொன்னார். ''மாடியில் இருக்கும் பியானோவைக் கீழே இறக்கிக் கொண்டு வாருங்கள்.''

—சாமி



பையனுக்குச் சபலம் தட்டியது.

குப்பனுக்கும் மனசு நிறைந்திருந்ததால் தாராளம் காட்டினான்.

''மொத்த எடையிலே நாலு கிலோ தள்ளிக்கிங்க மொதலாளி. ப்ரீ... நாந் தர்ரேன் உங்களுக்கு.''

எடை போட்டபோது 105 கிலோ இருந்தது. நாலு கிலோ தள்ளினும் 20 ரூபா 20 பைசா.

கடைக்காரரே தம் கைப்பட ஓர் இருபது ரூபாய் நோட்டை நீட்டியபோது, தன் ஐம்பது வயதில் முதல் முறையாக அந்த நோட்டைத் தொடும் பரவசத்துடன் சொன்னான் குப்பன்:

''மவராசா.... நீங்க நல்லா இருக்கணும். சில்லறை வேண்டாங்க; அத நீங்களே வச்சுக்குங்க; எங்க பேரைச் சொல்லி உங்க புள்ள குட்டிங்களுக்கு நல்ல சாக்குலேட்டு வாங்கிப் போயிக் குடுங்க.''

காலி சாக்குப் பைகளைப் பெற்றுக் கொண்டு - அதைத் தொட்டுக் கும்பிட்டு— மடித்துத் தலைமேல் போட்டுக் கொண்டு— ஏக 'சாலி'யாக நடை போட்டனர் இருவரும்!

''அம் ... குட்டி .... குப்பாயி .... ஒனக்கும் எதுனாச்சும் வாங்கிக்கடி. துட்டுதான் நெறைய இருக்கே.''

''வாணாம் மச்சான். ஒனக்கு எதுனாச்சும் வாங்கிக்க. நீதான் குடும்பத்தெத் தலைப்பாடாச் சொமக்கிறே தெனமும்.''

''அட சர்தான் புள்ளே. ரொம்பத்தான் கிராக்கி பண்ணிக்கிறே. என்ன வேணும் சொல்லு கண்ணு.''

குப்பாயி 'என்ன கேட்கலாம்' என்று பெரிதாக யோசித்தாள் சற்று நேரம். பின்னர் சொன்னாள்:

''வந்து மச்சான்....ம்.... தலைக்கு முழுவ நல்லெண்ணெயும், தடவிக்க வாசனை எண்ணெயும் வாங்கிக்கட்டா?''

வருடக் கணக்காக எண்ணெயின் வாசனையே காணாத குப்பாயியின் தலைமுடி, கற்றை கற்றையாக — சிக்குப் பிடித்து—செம்பட்டையாக — ஃபாரின் ஒப்பிலேடி. தலை மாதிரி காட்சியளித்தது.

எல்லாம் வாங்கப்பட்டன! குழந்தைகள் கேட்டது ஒன்று விடாமல்! மறக்காமல் ஒரு சோணி வளவியும் நூல் பந்தும் கூட!

பின்னர் ஒரு மிலிடரி ஹோட்டலில் புகுந்து மட்டன் பிரியாணி — பசங்களுக்குப் பார்சல்; பணம் சப்ஜாடா காலி!

சந்தோஷமாக, சீக்கிரமாக எட்ட நடை போட்டு இருப்பிடம் திரும்பிய அவர்களைப் பிள்ளைகள் ஆர்வமாகச் சூழ்ந்து கொண்டனர். அவர்கள் சாப்பிட்டு முடிப்பதற்குள் இவர்கள் குளியல் முடித்து, குப்பாயி மணக்கும் பின்னலுடனும் குப்பன் புது வேட்டி பனியனுடனும் காட்சி தந்தனர். இந்தக் கோலத்தில் முதன் முறையாக இவர்களைப் பார்த்த பசங்களுக்கு ஆச்சரியமும் ஆனந்தமும் தாங்க முடியவில்லை!

''ஹைய்யா.... ராசா.... ராணி!'' என்று சுற்றிச் சுற்றி வந்து கும்மாளமிட்டு ஆட்டம்

போட, ரப்பர் வளையும் ஊதலும் கிளு கிளுப்பூட்ட, ஓடாத கடியாரத்தில் ஆளுக்கு ஆள் ஆயிரம்வாட்டி மணி பார்க்க, இரவு நெடு நேரம் உல்லாசமாகக் கழித்த பின் மனம் நிறைந்த உறக்கத்தில் ஆழ்ந்தனர் குப்பன் அண்ட் கம்பெனியினர்!

'ஆஹா! இருபது ரூபாய் வருமானம் கிடைத்து விட்டால் வாழ்க்கையைத்தான் எவ்வளவு ஆனந்தமாக வாழ முடிகிறது' குப்பன் குடும்பத்தினர் மன ஓட்டம் இது!

விடிகாலையில் ஒரே கூச்சல்!

ஓலம்!

ஒப்பாரி!

அந்த இன்ஜினியர் வீட்டிலிருந்து கேட்டது. குப்பன் குடும்பம் பதறியடித்து அவ்விடம் ஓடியது.

தோட்டக்காரன் ஒப்பாரி வைத்துக்கொண்டிருந்தான்.

''ஐயோ, எசமான், இப்படிப் பண்ணிப் புட்டீங்களே.....?''

ஹாலில் எட்டிப் பார்த்தபோது, வரிசையாக இன்ஜினியர், அவர் மனைவி, பெண் பிள்ளை — சவமாக!

அக்கம் பக்கத்திலிருந்து நிறையப் பேர் சேர்ந்து விட்டிருந்தனர்.

''தோட்டக்காரரே, எப்படி நடந்துங்க இந்த அக்குரும்பு?'' குப்பன் பதற்றத்துடன் விசாரித்தான்.

''தற்கொலை....''

''தற்கொலையா? ஏங்க? ராசா கணக்கா வாழ்ந்துனு இருந்தாரு. அவருக்கு ஏனுங்க இந்தத் தலையெழுத்து? இத்தனைக்கும் பெரிய இஞ்சினீரு.''

இவர்கள் எல்லோரும் அவரை 'இன்ஜினியர், இன்ஜினியர்' என்றாலும் அவர் இன்ஜினியர் அல்ல. சாதாரண சூப்பர்வைசர் தான். இருந்தாலும் கமாரான வருமானம் உண்டு.

''பாக்டரி கட்டட வேலைங்களெல்லாம் முடிஞ்சுகட்டதாலே விவிலலே நிறையப் பேருங்களை வேலையிலேருந்து எடுத்துட்டாங்க.''

''நம்ம அய்யாவுக்கும் வேலை பூடுச்சிங்களா?''

''போயிருக்கும் — புரமோஷன் வந்த புது வேலையிலேயே இருக்கிறதாயிருந்தா; ஜூனியர் ஆயிட்ருருல்லே? ஆனா, பழைய வேலைக்கே திரும்புறதா யிருந்தா வச்சிக்கிறோம்னு சொல்லிட்டாங்க.''

''சம்பளமில்லாமயா....'' அப்பாவித்தனமாகக் கேட்டான் குப்பன். 'இல்லாவிட்டால் ஏன் தற்கொலை பண்ணிக்கிறார்' என்று அவனுக்கு நினைப்பு!

''அட யார்ரா கத்த...! சம்பளமில்லாமே ஆரு வேலை பாப்பாங்க? சம்பளத்தோட தான்! ஆனா, இதுலே மாசம் அறுநூறு ரூபாய்தான் வரும்...''

குப்பாயி குறுக்கிட்டாள். ''மாசா மாசமா? மாசா மாசம் அரநூறு ரூவா வருமா! அப்புறம் ஏன்....?!''

''ராத்திரி அய்யாவுக்கும் அம்மாவுக்கும் ஏகத்தாறு சண்டை. 'இப்பவே இருபத்



எழுத்தாளர் 1: எனக்கு விஸ்கி ம அடிச்சாதான் கதை எழுத 'மூட்' வரும், உங்களுக்கு?

எழுத்தாளர் 2: எனக்குக் காப்பி அடிச்சாத்தான் கதை எழுத 'மூட்' வரும்.

— எம். ஏ. அப்துல் காதர்

---

தஞ்சு தேதியாறு கையிலே பணமிருக்கிற தில்லே. பொண்ணு வேறே பெரிசாயிட்டு வரா — கல்யாணம் பண்ணணும். பிள்ளை பெரிய படிப்புப் படிச்சாகணும். இதுலே வருமானம் வேறே கொறையுது? இந்தப் பிச்சாத்து மாதச் சம்பளத்திலே எப்படிக் குடித்தனம் பண்ணிக் குப்பை கொட்டுறது'ன்னு அம்மா கத்திப்புட்டாங்க. அய்யாவுக்கும் கவலைதான்—எப்படிப் பொழைக்கிறதுன்னு. பேசாம ராத்திரி சோத்துலே மூட்டைப் பூச்சி மருந்தைக் கலந்துட்டாரு. கடுதாசி எழுதி வச்சிருக்காரு.''

''ஆங்....''

நிறையச் சம்பாதிக்கத் தெரிந்து எவ்வித பிரயோசனமுமில்லை; வரவுக்குள் வாழத் தெரிந்திருக்க வேண்டும்; அவ்வளவே.

மகிழ்ச்சி என்பது எதில் இருக்கிறது?
மனத்திலா.... பணத்திலா?

எப்போதாவது ஒரு நாள் இருபது ரூபாய் சம்பாதிக்கும் நடுத் தெருக் குடும்பம், ஆனந்தத்தின் எல்லைக்குச் செல்ல முடியும் போது,

நிரந்தரமாக மாதம் அறுநூறு ரூபாய் சம்பாதிக்கும் நடுத்தரக் குடும்பம், சுடுகாட்டுக்குப் போய் விட்டது!



அம்மா உங்கள் கவனிப்பு கரை கடந்தது.

உலகிலோர் ஒப்பிலா
மணி யென அவளுக்கு
உணர்த்திடும் அன்புறவே.



ஆறுதல் தேவையம்மா
அடிக்கடி அவளுக்கு.

அவளை சீராட்டி வளர்க்க
நீங்கள் எதனையும்
செய்வீர்கள்: குளிப்பாட்டி,
உடை உடுத்தி, உணவூட்டி,
உடல் நலம் பேணிக்
காப்பதில் நீங்கள் எடுத்துக்
கொள்ளும் கவனம்தான்
எவ்வளவு?

கருத்துள்ள அதே கவனம்
பளிச்சிடுமே நீங்கள்
அவளுக்கு தேர்ந்தெடுக்கும்
பிஸ்கட்டிலும். திண்ணம்
அதுவே, தீவிர சுகாதார
முறையில் கைபடாத்
தூய்மையோடு தயாரித்த
பிஸ்கட்.

நீங்கள் அவளுக்கு ஊட்டும்
உணவிலே உள்ளதைப்
போன்ற நிகரான
ஊட்டச்சத்து அதிலே: பால்,
சர்க்கரை, க்ளுகோஸ்,
செரிப்பதற்கு எளிதாக
இழைய அரைத்த கோதுமை.

கண்மணிக்கென்று உங்கள்
கரம் தொடும் அந்த பிஸ்கட்
கரகரப்பானது, சுவை
மிக்கது. கொரித்து, ரசித்து
மகிழ்வாளே உங்கள்
குழந்தை.

எண்ணிப் பாருங்கள்:
7 உலக விருதுகளைவென்ற
இந்தியாவின் அதிநவீன
பிஸ்கட் தயாரிப்பாளர்-
களின் படைப்பை.

பாப்பா படம் போட்ட இந்த
வண்ணமய உறையை
பார்த்து வாங்குங்கள்.




7, உலக விருதுகளை வென்றது.

பார்லே
க்ளுகோ

**உங்கள் பாசத்தைப் பேசிடும் குழந்தை பராமரிப்பு பிஸ்கட்.**

# நீதிக்கு முன் நீயா, நானா? படவிமரிசனம்

தாய்—தந்தை வீட்டுப் பணியாள் மூவரையும் தன் கண் முன்னாலே துடிக்கத் துடிக்க மிகவும் கொடூரமான முறையில் கொலை செய்யும் கொடுமையைக் காண்கிறான் சிறுவன் சுந்தரம். அப்படி அவர்களைக் கொன்றவர்களைப் பழி வாங்குவதாக உறுதி பூண்டு வாலிபனாகி, தற்காப்பும் போர் முறைப் பயிற்சிகள் பெற்றும் பழிதீர்த்துக் கொள்ளுகிறான். புளித்துப்போன பழைய கதை என்றாலும் சிறப்பாகவே எடுத்திருக்கிறார்கள். சண்டைப்பட ரசிகர்களுக்கு நல்ல விருந்து. வழக்கமான ஸ்டண்ட் படம் போலில்லாமல் ரசிக்கும்படியாகவும் இருக்கிறது. பழி தீர்க்கும் வாலிபன் சுந்தரமாக விஜயகுமார் சிறப்பாகச் செய்திருக்கிறார். இவரது காதலி சாந்தியாக லதா வருகிறார். சுந்தரமும் சாந்தியும் சந்தித்துக் கொள்ளும் முறை வித்தியாசமானது. அதே போல வடநாட்டுக்காரர்கள் வீட்டுக் கலியாணத்தில் உண்மையான ஜோடிகளுக்குப் பதிலாகப் போலியான இவ்விருவரும் அமர்ந்து மணம் முடித்துக் கொள்ளுவதும் வித்தியாசமானதுதான். ஜிலுஜிலுப்பூட்டும் காதல் காட்சிகள்.

கண்முன்னே கணவர் மாறுவேஷத்திலிருந்தும் கணவனை இழந்த கைம்பெண்ணாகத் தான் நடந்து கொள்ள வேண்டிய கட்டத்தில் லதாவின் நடிப்பு சோபிக்கிறது. நம்பியார், கண்ணன், ராமதாஸ் மூவரும்தான் வில்லன்கள். வில்லத்தனங்களில் அனல் பறக்கக் கேட்பானேன். ஆடியன்ஸை அட்டென்ஷனில் அமர வைக்கும் கதைப் போக்குக்கு ஸ்ரீகாந்த் இன்னும் டென்ஷனை ஏற்றுகிறார்.

ஜூடோ ரத்தினத்தின் சண்டைக்காட்சிகளைக் கொண்டு விறுவிறுப்பானதோர் படத்தை இயக்கி இருப்பவர் துரை. ஜூடோ உதவுகிறதுபோல் கராத்தே, நங்ஃபூ உதவுமா?



# பகலில் ஓர் இரவு படவிமரிசனம்

புதுமையான கதை — குளுமையான காட்சிகள் — இனிமையான பாடல்கள் — அருமையான நடிப்பு — இத்தனையும் கொண்ட படம் இந்த இரவு.

கொஞ்ச நாட்கள் அக்ஞாதவாசத்துக்குப் பிறகு தோன்றும் விஜயகுமாரின் நடிப்பில் மெருகேறியுள்ளது. நிதானமும் நிறைவும் காணகிறோம். ஆர்ப்பாட்டமில்லாத நடிப்புக்கு அவரது உருவமும் இளமையும் கை கொடுக்கின்றன.

பட்டுப்பூச்சிகளை விரும்பும் பாவையாக வருகிறார் ஸ்ரீதேவி. பட்டாம்பூச்சியின் மென்மையும் அழகும் படபடப்பும் துடிப்பும் அவர் நடிப்பில் சுடர் விடுகின்றன. பின் விளைவைப் பற்றியறியாத பருவத்தில் கன்னி மிழந்து தாய்மையடைந்து விட்டபோது, கருவைக் கலைக்கும் முயற்சியில் ஏற்பட்ட அதிர்ச்சி அடிக்கடி வந்து தாக்குவதையும் 'க்ளைமாக்ஸ்' கட்டத்தில் 'நான் அப்படிப்பட்டவளில்லை, நான் கெட்டவளில்லை. நீங்கள் நம்புகிறீர்களா' என்று ஒவ்வொருவராகக் கேட்டுக் கதறிக் கண்ணீர் விடும் கட்டத்திலும் படம் பார்ப்போரின் உள்ளங்களைத் தம் நடிப்பால் உலுக்கி விடுகிறார் ஸ்ரீதேவி. 'தாம் தகம்த ஆடும் உள்ளம் பாடும்' என்ற இனிமையான பாடலும் மெட்டும் இளையராஜாவின் வேறொரு படத்தின் மெட்டை நினைவு படுத்துவதாக இருந்தாலும் சிறப்பாக இருக்கிறது—எல்லாப் பாடல்களுமே தான்.

மனப்போராட்டங்களை மையமாகக் கொண்ட இந்தப் புதுமையான கதைப் போக்குடைய படத்தில் வரும் எல்லாப் பாத்திரங்களுமே கச்சிதமாக, சிறப்பாக நடித்திருக்கிறார்கள். க்ளாமர் ரோல்களிலே' செக்ஸியாகத்தான் சோபிக்க முடியும் என்ற எண்ணத்தை உள்ளடக்கிய சீமா கூட இதில் காதலைத் தியாகம் செய்யும் காரிகையாக அபாரமாக நடித்திருக்கிறார்.

இயக்குனர் சசி, இப்படத்தின் ஆர்ட் டைரக்டரும்கூட. காட்சி அமைப்பு, செட்டிங், தேர்ந்தெடுத்துள்ள வெளிப்புற லொகேஷன்கள் இவைகளில் அவருடைய கலையுள்ளத்தைக் காணமுடிகிறது. உள்ளூரிலே இத்தனை சிறப்பாக, கச்சிதமாக, கலையழகும் விறுவிறுப்பும் கொண்ட படத்தைத் தயாரிக்கும் திறன் படைத்த சசி எதற்காக அமெரிக்கா போன்ற வெளி நாடுகளுக்குப் போக வேண்டும்? பகலில் ஒரு இரவு — முழு நிலவு.



# நான் வாழ வைப்பேன்

## பட விமர்சனம்

வாழ்வதற்காகப் போராடும் ஒரு இளைஞன், தன் காதலனை அவனை வாழ வைப்பதற்காக வாதாடும் பெண் கிரிமினல் லாயர், மரண தண்டனை விதிக்கப் பட்ட அந்த இளைஞனின் குடும்பத்தைக் கண்டு கண் கலங்கி எப்படியும் அவனை வாழ வைப்பேன் என்று தன் உயிரையே பணயமாக்கும் நாடோடி இவர்களைக் கொண்டு பின்னப்பட்ட மர்மக்கதைதான் இது. ஒரு இந்திப்படத்தின் அப்பட்டமான காப்பி என்று பேசிக் கொள்ளுகிறார்கள். ஆனால் க்ளைமாக்ஸ் சீன் — ரஜனி குண்டடி பட்டும் கொலைகாரனைத் தன் துப்பாக்கி முனையில் நகரவிடாமல் நிறுத்தி நீதியை நிலைநாட்டக்காத்திருப்பது போன்ற காட்சி பல ஆங்கிலப் படங்களில் நாம் ஏற்கெனவே பார்த்துதான் என்பது மட்டும் உண்மை. மூலக்கதை எதுவானாலும் இந்தக் கதையை விறுவிறுப்பாகவே இயக்கியுள்ளார் யோகானந்த். நடிகர் திலகம் அநாயாசமாகச் செய்திருக்கிறார்.

புன்னகை அரசியின் நடிப்பும் எடுப்பாக உள்ளது. ஒருவன் தான் செய்யாத கொலையைச் செய்ததாகத் தன்னைத் தானே குற்றவாளியாக்கிக் கொள்ளுவது சாத்தியமா? நம்புவதற்குக் கொஞ்சம் சிரமமாகத் தான் இருக்கிறது.

நான் வாழ வைப்பேன் தயாரிப்பாளர்களைத் தாழ்வுறச் செய்யாது.

— கௌசிகன்

---

தன் காதலியின் பிறந்த நாளைக்குக் காதலர் ஒருவர் அளித்த பரிசு புதுமையானது. இடம்: இங்கிலாந்து. பிறந்த நாளன்று செய்தித்தாளில் முழு பக்க விளம்பரமாகப் பிறந்த நாள் வாழ்த்தை அவளுடைய புகைப்படத்துடன் வெளியிட்டார் அவர். 'இப்படி அநாவசியமாக 850 டாலர் செலவு செய்வானேன்' என்று ஒருவர் கேட்டதற்கு, "அநாவசியம் இல்லை; அன்பு" என்றார் அவர் - ஜாக்ஹால். "என் காதலி தனக்குப் பிறந்த நாள் பரிசு எதுவும் வேண்டாம் என்று கூறி விட்டாள். அதோடு, என்ன காரணத்தினாலாவது எங்கள் காதல் முறிந்து விட்டால், இந்தப் பரிசை அவளால் திருப்பித் தரமுடியாது பாருங்கள்!"

—நியூஸ்வோர்ல்டு — ஆர். எம்.



மண்ணுலகத்திலே உயிர்கள்தாம் வருந்தும்
வருத்தத்தை ஒரு சிறிதெனினும்
கண்ணுறப் பார்த்தும் செவியுறக் கேட்டும்
கணமும் நான் சகித்திட மாட்டேன்
எண்ணுறும் எனக்கே நின்னருள் வலத்தால்
இசைத்த போ திசைத்த போதெல்லாம்
நண்ணும் அவ்வருத்தம் தவிர்க்கும் நல் வரந்
தான் நல்குதல் எனக் கிச்சை எந்தாய்

- திருவருட்பா

இராமலிங்க வள்ளல் பெருமான் வாக்குக்
கேற்ப வாழ்ந்து காட்டிய திரு ஏ. வி. எம்.
அவர்களுக்கு அஞ்சலி



தோற்றம் : 28-7-1907
மறைவு : 12-8-1979

**ஸ்ரீ ராமலிங்கர் மிஷன்**

31, போயஸ் கார்டன், சென்னை-600086

# ராஜாஜி வாழ்க்கை வரலாறு

## ராஜ்மோகன் காந்தி

கடவுளிடம் பயபக்தி கொண்ட இருவர், சரித்திரம் அவர்களை எதிரெதிரான தரப்புக்களில் வைத்துவிட்ட போதிலும் என்ன சாதிக்க முடியும் என்பதற்குக் காந்தி இர்வின் ஒப்பந்தம் ஓர் எடுத்துக்காட்டு என்று ஸி. ஆர். கருதினார். அந்த ஒப்பந்தம் நன்கு அமல்படுத்தப்பட வேண்டும் என்பதில் அவரை விட அதிகமாக காங்கிரஸார் வேறு யாருமே சிரத்தை கொண்டிருக்க முடியாது. இர்வினை அவர் வைஸ்ராயாக மட்டுமின்றி மனிதராகவும் பார்த்தார். பிரிட்டனிலிருந்து இந்தியாவுக்கு வந்த ராஜப் பிரதிநிதிகளுள் மற்ற எல்லாரையும்விட சிறந்த, உண்மையான கிறிஸ்துவராக அவரை எண்ணினார்.

எதிர்ப்புக் காட்டுவது, எதிரியை நம்புவது ஆகிய இரண்டுமே மகாத்மாவின் ஆயுதக் கிடங்கில் இருந்த ஆயுதங்கள். பெரும்பாலான காங்கிரஸ்காரர்கள் முதல் அம்சத்துக்காக மட்டுமே காந்தியிடம் ஈர்க்கப்பட்டார்கள். ஸி. ஆர். இரண்டு அம்சங்களாலும் கவரப்பட்டார்.

ஒத்துழையாமையில் தீவிரம் காட்டி வந்த ஸி. ஆர்., இன்று காந்தி, சுயராஜ்யத்துக்கு இரண்டாவது மார்க்கம் என்று குறிப்பிட்ட வழியில் சென்று முழு மனத்துடன் ஒத்துழைத்து ஆராயவும் தயாரா யிருந்தார்.

இதனால்தான் காந்தி — ஸி. ஆர். இருவருமே, படிப்படியாக உருமாறி வந்த வில்லிங்டன் ஆட்சியின் போக்கு கண்டு பெரும் ஏமாற்றத்துக்குள்ளாயினர். இர்வின் டோரி கட்சியைச் சேர்ந்தவர் எனின் வில்லிங்டன் லிபரல் கட்சியினர். இவர் இந்திய சமஸ்தானங்களின் மகாராஜாக்களுடன் இழைவதை விரும்பினார். காந்தியையும் காங்கிரஸையும் வெறுத்தார். சட்ட மறுப்பு மனப்பான்மையை இர்வின்—காந்தி ஒப்பந்தம் மன்னிப்பதாக இவர் ஒருவேளை கருதியிருக்கலாம். அம்மனப்பான்மையை அழித்து ஒழித்துக் கட்டுவதென இவர் உறுதியுடன் இருப்பதாகத் தோன்றியது.

ஒப்பந்தத்தினிடம் விசுவாசம் காட்டி அரசு நடந்து கொள்ளும் என்ற நம்பிக்கை ஆகஸ்டு மாதத்தில் காங்கிரஸுக்கு இல்லாமல் போய் விட்டது. குஜராத்தில் காங்கிரஸுக்கு ஏற்பட்ட அனுபவம் இந்த ஏமாற்றகரமான முடிவுக்கு வரச் செய்தது.

அங்கே விவசாயிகளுக்குப் பெரும் கஷ்டம் காத்திருந்தது. போராட்டத்தின் போது வரி கொடாமல் இருந்தார்கள். அவர்களுடைய நிலத்தை அரசு பறிமுதல் செய்திருந்தது. ஆனால் மகாத்மா இப்போது— ஒப்பந்தத்துக்குப் பிறகு — அரசுக்குத் தர வேண்டிய வரி பாக்கிகளைக் கொடுத்து விடுமாறு விவசாயிகளைக் கேட்டுக் கொண்டார். அரசின் வரி வசூல் அதிகாரி மாதிரி காந்தி செயல்படுவதாக ஸி. ஆர். குறிப்பிட்டார்.

மகாத்மாவின் வார்த்தை விவசாயிகளுக்குச் சட்டம் போன்றது. அவர்கள் நிலம் பறிமுதலானதால் ஓராண்டு காலமாக வருவாய் இழந்திருந்தார்கள். இருப்பினும் வரி பாக்கியைக் கொடுத்தார்கள். அதிகாரிகள் இதனாலும் திருப்தி அடையவில்லை. நடப்பு ஆண்டுக்குரிய வரியைக் கொடுக்குமாறு வற்புறுத்தினார்கள். பறிமுதல் செய்யப்பட்ட நிலத்தைத் திருப்பித் தருவதைத் தாமதப் படுத்தினார்கள்.

சமாதான ஒப்பந்தம் காற்றிலே பறக்க விடப்படும் சமயம் மகாத்மா லண்டன் வட்ட மேஜை மகாநாட்டுக்குப் போவது சரியா? ஒரு வேளை தவறாகி விடலாம் என்று காந்தியே எண்ணினார். ஆகஸ்டில் காரியக் கமிட்டி மகாத்மாவின் பயணத்துக்கு எதிராக வோட்டளித்தது.

சமாதான ஒப்பந்தம் சரியாக அமல்படுத்தப்படவில்லை என்பது மட்டும் காரணமல்ல. காங்கிரஸுக்கும் மகாத்மாவுக்கும் இந்தக் கட்டத்தில் முஸ்லிம்களின் தெளிவான ஆதரவு இருக்கவில்லை. அது இல்லாமல் லண்டனில் வெற்றி பெறுவது சாத்தியமில்லை.

ஜின்னா தமது நிலையை ஐயம் இரிபுக்கு இடமின்றி எடுத்துக் கூறினார்: ''பிரிட்டிஷ் அரசு, ஹிந்துக்களுக்கு அவர்கள் விருப்பப்படி ஓர் அரசியல் சட்டத்தைத் தருமேயானால் முஸ்லிம்கள் அதனை எதிர்ப்பது இயல்பே. அந்த அரசியல் சாசனத்தை உடைத்தெறியவும் அழிக்கவும் எல்லாவித முயற்சிகளையும் அவர்கள் மேற்கொள்வார்கள்.'' காங்கிரஸும் காந்தியும் ஹிந்துக்களின் சார்பாக மட்டுமே பேசுவதாக ஜின்னா குற்றம் சாட்டினார்.

ஹிந்து முஸ்லிம் பிரச்னை தீர்க்கப்பட்ட நிலையில்தான் மகாத்மா லண்டன் மகாநாட்டுக்குப் பயணமாக வேண்டும் என்று தொடக்கத்திலிருந்தே கவலை கொண்டிருந்த ஸி. ஆர். அறிவுரை வழங்கியிருந்தார்:

✖ ஜின்னா ✖ முன்ஷி



''முஸ்லிம் சமுதாயம் தனக்குப் பாதுகாப்புத் தேவை என்று கருதினால் அது தொடர்பாக அவர்கள் கோருவதை யெல்லாம் ஹிந்துக்கள் விட்டுக் கொடுத்துத்தான் ஆக வேண்டும். இதனை நாம் பேச்சளவில் ஒப்புக் கொண்டாலும் போதாது. முஸ்லிம்கள் எந்த எந்தச் செயல் திட்டங்கள் மேற்கொள்ளப்பட வேண்டும் என்று கருதுகிறார்களோ அவற்றை ஏற்றேயாக வேண்டும்.

## 37. பாபுவின் லண்டன் பயணம்

இரவை வி. ஆரின் தூண்டுதல் பேரில் காங்கிரஸ் எதையெல்லாம் விட்டுக் கொடுத்ததோ அதை யெல்லாமும் போதாது என்று ஜின்னாவும் மற்றவர்களும் நிராகரித்து விட்டனர். இருப்பினும், காந்தி இர்வின் ஒப்பந்தம் பலவீனப்பட்டிருந்த நிலையிலும், காந்தியின் லண்டன் பயணத்தால் நன்மையும் உண்டு என்று வி. ஆர். கண்டார். பிரிட்டிஷ் மக்கள் மீது மகாத்மா செல்வாக்கு பெற இப்பயணம் உதவும். எனவே, ''அவசியம் போய் வாருங்கள்'' என்று அவர் தம் தலைவருக்கு எழுதினார். ''அங்கே நாம் தோல்வியுற்றாலும் இப்போதுள்ள நிலை இன்னும் மோசமாகி விடப் போவதில்லை.''

இதனால் நம்பிக்கை பெறாமல் மகாத்மா பதில் எழுதினார்: ''லண்டன் போவதில் தனிப்பட்ட கவர்ச்சி ஏதும் இல்லை. இங்கே நமது நிலைமை மோசம் எனில் அது அங்கு சென்றதும் அபிவிருத்தி அடையப் போவதில்லை. மேலும் மோசமாகத் தான் போகும். டில்லி அரசையும் லண்டன் அரசையும் ஒரே மாதிரியாக நாம் கருதுவதே நல்லது.''

அரசுகள் ஒன்றேயானாலும் பிரிட்டிஷ் மக்களை ஒரு தனித் தொகுதியாக எண்ணலாம். அவர்களைக் காந்தி கவர முயலலாம் என்று வி. ஆர். எண்ணினார். மறுபடியும் மகாத்மாவை வற்புறுத்தினார்.

வேறு பலரும் காந்தியை வற்புறுத்திக் கொண்டிருந்தனர். ஸிம்லாவில் காந்திக்கும் வில்லிங்டனுக்கும் இடையில் இங்கிதமற்ற ஒரு பேச்சுவார்த்தை நிகழ்ந்தது. குஜராத் விவசாயிகள் நடத்தப்பட்ட விதம் பற்றிய விசாரணையில் ஒரு சிறு சலுகை காட்ட வைஸ்ராய் சம்மதித்தார், அவ்வளவே.

மகாநாட்டினால் எந்தவிதமான பயனும் விளையாது என்று திடமாக நம்பினார் காந்தி. இருப்பினும் லண்டனுக்குக் கப்பலில் பயணப்படச் சம்மதித்தார். வி. ஆரை அவர் உடன் அழைத்துப்போவார் என்று பலர் எண்ணினார்கள். ''லண்டனுக்கு நீங்கள் போகவில்லையா?'' என்று பம்பாய் வழக்கறிஞரும் எழுத்தாளருமான கே. எம். முன்ஷி வி. ஆரைக் கேட்டார். பின்னாளில் உயர்ந்த பதவிகளை வகிக்கப் போகின்றவரான முன்ஷியின் இந்தக் கேள்விக்குப் பதில் இல்லை என்பதுதான். வி. ஆர். இந்தியாவில் இருந்தவாறே சேவை புரிவார். மகாத்மா அவருக்கு நாம் கவனத்தில் கொள்ளத் தக்கதான ஒரு கடிதம் எழுதினார்:

''லண்டனில் என் அருகே இருவர் இருப்பதை நான் விரும்புவேன். நீங்களும் ஜவாஹர்லாலும். இருவருமே அங்கு வருவது சாத்தியமென்றாலும் உங்கள் இருவரையும் என் அருகில் வைத்துக் கொள்ளக்கூடாது என்றே கருதுகிறேன். நீங்கள் என்னுடன் இருந்தால் என் சுமை குறையும். இருப்பினும் மற்றவர்களைப் போல் இங்கு இருப்பதன் மூலமே நீங்கள் எனக்கு உதவுவீர்கள்.''

யங்இந்தியா மறுபடியும் வி. ஆரின் பொறுப்பில் வந்து சேர்ந்தது. காந்தி அயல் நாடு செல்வதால் அவர் பத்திரிகை ஆசிரியராக இருக்கக் கூடாது எனில் வி. ஆர். அப்பதவியை வகிப்பார். மேலும், நமது குழாத்தினரிடையே அபிப்பிராயபேதங்கள் உருவானால் வி. ஆரின் தீர்ப்பே முடிவானதாக இருக்கும் என்று மகாத்மா அறிவுறுத்தினார்.

ராஜபுதனம் என்ற நீராவிக் கப்பல் தனது மேல் தளங்களுள் ஒன்றில் மகாத்மாவைச் சுமந்து கொண்டு செப்டம்பர் தொடக்கத்தில் லண்டனுக்குப் பயணப்பட்டது. ''லண்டன் காந்தியுடன் கௌரவமான உடன்பாடு கொள்ளவில்லையெனில் போராட்டம் மறுபடியும் ஆரம்பமாக வேண்டியதுதான்'' என்றார் வி. ஆர்.

(தொடரும்)

தமிழாக்கம் : இ. ராஜேந்திரன்




## SHIP WRECK

கப்பலில் சுற்றுலா புறப்பட்ட குழுவினர், கப்பல் உடைந்ததால் ஜன நடமாட்டமே இல்லாத ஒரு தீவில் பிரவேசிக்க வேண்டி வருகிறது. இவர்களைத் தேடும் முயற்சிகள் பயன்தரவில்லை என ரேடியோச் செய்தி ஆணித்தரமாகக் கூற அதை இவர்களும் கேட்டுச் சோர்வடைகின்றனர். தங்களுக்கு வரும் ஆபத்துக்களை ஒன்றன்பின் ஒன்றாகச் சமாளிக்கின்றனர். கொடிய கரடி அவர்களைத் தொடர்ந்து துன்புறுத்துகிறது. ஒரு பாழடைந்த விமானத்தைக் கண்டு பிடிக்கின்றனர். விமான ஓட்டியின் எலும்புக்கூடு. அவனது டைரி இவைகளைக் கண்டதும் அவர்கள் திகிலடைகின்றனர். தீவில் அவர்களது ஜீவமரணப் போராட்டங்களைத் திரைப் படம் சித்திரிக்கிறது. ஸீலயன்ஸ் எனப்படும் கடல்வாழ் மிருகங்கள் சில இந்தச் சுற்றுலாக் குழுவினருடன் நட்பு கொண்டு பழகுகின்றன. இதற்கு அத்தாட்சியாக, இறுதியில் அவர்கள் தீவை விட்டுப் போகும்போது அவை பிரியா விடை அளித்து அனுப்புகின்றன. இந்தக் காட்சி பார்ப்பவர் நெஞ்சை நெகிழ வைப்பதாக உள்ளது.

-டி.எம்.ஆர்.

# நீ பாதி நான் பாதி

**கமலா நடராஜன்**



திருமதி பார்வதி அவர்களுக்கு,

உங்களுக்கு நான் ஏதோ கடிதம் எழுத வேண்டும் என்ற ஆவல் காரணமாக இதை எழுதுவதாக எண்ணிப் பெருமைப்பட்டுக் கொள்ள வேண்டாம். அப்படி ஒரு துர்ப் பாக்கிய நிலை வந்துவிட்டதே என்றுதான் எழுதித் தொலைக்கிறேன். சென்ற மாதம் 'வனஸ்பதி' பத்திரிகையிலிருந்து எனக்கு ஒரு கதை திரும்பி வந்தது.

ஒரு வெட்டு — ஒரு குத்து — ஒரு கொலை.

தலைப்பே என்னைக் கிடுகிடுக்க வைத்து விட்டது. முதலில் அது ஏதோ எனக்கு வந்த மிரட்டல் கடிதம் என்று நினைத்தேன். பிறகு தான் அது பத்திரிகைக்கு யாரோ எழுதிய சிறுகதை என்பது தெரிந்தது. அப்படி ஒரு கதை நான் எழுதவேயில்லை. மீண்டும் ஒரு முறை விலாசத்தைப் பார்த்தேன்.

பார்வதி விசுவநாதன், மகாதானத் தெரு, திருவிடை மருதூர்.

நிச்சயமாக என் விலாசம்தான்.

அதற்குள் தினம் இரண்டு விதம், பல பத்திரிகைகளிலிருந்து பதினைந்து கதைகள் திரும்பி வந்து விட்டன. அப்புறம் விசாரித்தபோது, தாங்கள் ஓர் எழுத்தாளர், இதே தெருவில் இதே பெயரில் இருப்பதாகத் தெரிந்தது. (போதாதற்கு வீடுகளின் பழைய எண் புது எண் குழப்பம் வேறு). அந்தப் பதினைந்து கதைகளும் இப்பொழுது என் மேஜையில், இருக்கும் இடத்தையும் அடைத்துக்கொண்டு கிடக்கிறது. தயவு செய்து தாங்கள் நேரில் வந்து அவைகளைப் பெற்றுச் சென்றுவிடுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

அன்புடன்
(பார்வதி) விசுவநாதன்.

திரு விசுவநாதன் அவர்களுக்கு

தாங்கள் ஒரு பண்புடைய எழுத்தாளராக எனக்குத் தெரியவில்லை. பார்வதி விசுவநாதன் என்ற பெயரில் நான் ஒருத்தி எழுதிவரும்போது தாங்களும் அதே பெயரில் அதாவது தங்கள் மனைவியின் பெயரில் புகுந்து கொண்டு கதை எழுதுவது ரொம்பவும் வருந்தத்தக்கது. அதைவிட வருந்தத் தக்கது கடிதங்கள் உங்களுக்கில்லை என்பது தெரிந்தும் அதை உடனே போஸ்ட் மேனிடம் கொடுத்து விடாதது. இனியாகிலும் இம்மாதிரி தவறு நடைபெறாமல் பார்த்துக் கொள்ளவும்.

ஒன்று மறந்து போனேன். நான் எழுதாமலேயே என் பெயருக்கு இதே மாதிரி திரும்பி வந்த கதைகள் ஏழெட்டுக் கிலோ இருக்கிறது. தேவையானால் வந்து பெற்றுக் கொள்ளலாம்.

ஆமாம் அது என்ன சார் கதைகளுக்கு இப்படிப்பட்ட தலைப்புக்கள்? 'ஒரு யானை மழுங்கி வருகிறது', 'ஒரு கோபுரம் குப்பையாகிறது', 'ஒரு யானை பூனையாகிறது'!

ஒன்றாவது உருப்படியானதாகத் தெரியவில்லையே!

அதிருக்கட்டும். நான் திருமதி என்று உங்களுக்கு யார் சொன்னது? நான் பார்வதி டாக்டர் ஆஃப் விசுவநாதருக்கும்.

இங்ஙனம்
பார்வதி (விசுவநாதன்)

செல்வி பா. வி. அவர்களுக்கு,

அது சரி, நம் இருவருக்கும் பெயர் ஒன்றாக அமைந்த போதிலும், கதைகள் தடுமாறுவது போலக் கடிதங்கள் தடுமாறாமல் நான் எழுதுவது உங்களுக்கும் நீங்கள் எழுதுவதும் எனக்கும் கிடைத்து விடுகிறதே எப்படி?

மேலும் ஒரு யோசனை. நம் பெயர்களில் உள்ள குழப்பம் நீங்க, பார்வதி விசுவநாதன் என்பதைச் சுருக்கி நீங்கள் ஏன் 'பாவி' என்று புனைபெயரில் எழுதக் கூடாது?

அன்பன் விசுவநாதன்.

திரு விசுவநாதன் அவர்களுக்கு,

நீங்கள் குறிப்பிட்டுள்ள புனைபெயரில் எழுத வேண்டியது முறைப்படி நீங்கள்தான். ஏனென்றால் முதன் முதலில் எழுதத் தொடங்கியவள் நான். அதாவது ஆயிரத்துத் தொள்ளாயிரத்து அறுபத்து நாலிலிருந்து எழுதி வருகிறேனாக்கும்!

உங்கள் கதைகள் கரையான் பிடிக்கும் நிலையில் இருப்பதால் உடன் வந்து பெற்றுச் செல்லவும்.

இங்ஙனம், பார்வதி.

செல்வி பார்வதி அவர்களே,

போட்டீர்களே ஒரு போடு! வயது பதினெட்டாம், எழுதத் தொடங்கிப் பதினைந்து வருடங்கள் ஆகிறதாம். எனக்கு எப்போதோ காது குத்தி, தூர்ந்தும் போய்விட்டது. மூன்று வயதிலேயே கதை எழுதத் தொடங்கிய முதல் எழுத்தாளர் உலகத்திலேயே நீங்கள்தான். சீனியர் என்பது கதை எழுதத் தொடங்கிய காலத்திலிருந்தே தவிர, தமிழ் கற்கத் தொடங்கிய காலத்திலிருந்தல்ல.

கதைகளிலும் இப்படித்தான் போட்டுக் குட்டை குழப்புவீர்களோ? வாசகர்கள் துணியை மட்டும் கிழித்துக் கொள்ள மாட்டார்கள். அதிலுள்ள நூல்வரை பிய்க்கத் தொடங்கி விடுவார்கள்.

அன்பன், விசுவநாதன்

திரு விசுவநாதன் அவர்களுக்கு,

எதிர்பாரா விதமாக நேற்று உங்களை மகாலிங்க சுவாமி கோவிலில் சந்திக்கும்படியாயிற்று. திடுக்கிட்டுப் போனேன். உங்கள் எழுத்துக்களைப் படித்தபோது அதிலுள்ள அனுபவங்களைக் கொண்டு உங்களுக்குச் சுமார் ஐம்பது வயதாகிலும் இருக்க வேண்டும் என்று எண்ணியிருந்த எனக்கு, அதில் பாதி வயதே ஆகியுள்ள ஏதோ கொஞ்சம் அழகான, ஏதோ கொஞ்சம் செக்கச் சிவந்த நிறத்துடன் ஏதோ கொஞ்சம் மிடுக்கான தோற்றத்தில் உங்களைச் சந்தித்தால் ஆச்சரியமாக இருக்காதா என்ன?

நமது போஸ்ட்மேன்தான் உங்களை எனக்கு அங்கு அடையாளம் காட்டினார். 'உங்கள் பெயரிலேயே கதை எழுதும் மற்றொரு எழுத்தாளர் அந்தப் பையன்



தானம்மா உங்கள் இருவராலும் உண்டாகும் குழப்பத்தில்தான் நான் இன்னும் கோவிலைச் சுற்றுகிறேன்' என்றார்.

ஒன்று தெரியுமா உங்களுக்கு? மகாலிங்க சுவாமி கோவிலைச் சுற்றினால், எப்படிப்பட்ட பைத்தியமும் தெளிந்து விடும் என்பது ஐதிகம்.

ஒரு சந்தேகம், உங்கள் மனைவி உங்களை மாதிரியே அழகாக இருப்பாளா சார்?

இங்ஙனம், பார்வதி.

செல்வி பார்வதிக்கு,

அந்த அழகிக்கு வயது பதினெட்டு இருக்கலாம். அழகிய நீண்ட வட்ட முகம். அருமையான கண்கள். சின்னச் சின்ன சிவப்பு உதடுகள். கொஞ்சம் முன் நீண்ட முகவாய். கிள்ளி விளையாடிக் கொண்டே இருக்கத் தோன்றும் மூக்கு. நெற்றியிலுள்ள திருநீற்றுக் கீற்றின் மீது அளவான குங்குமப் பொட்டு. நான் வர்ணித்தது என் மனைவியை அல்ல; அப்படி ஒரு பெண்ணை மூகாம்பிகா சந்நிதியில் நேற்றுப் பார்த்தேன். அது தாங்களாக இருக்குமோ என்று நினைக்கிறேன்; அது தாங்களாகவே இருக்க வேண்டும் என்றும் ஆசைப்படுகிறேன்.

இந்தப் போஸ்ட்மேன் சுத்த மோசம். என்னை உங்களுக்கு அறிமுகம் செய்து வைத்தவர், உங்களை எனக்கு அறிமுகம் செய்து வைக்க வேண்டாமோ?

என்னை ஓர் அழகன் என்று மறைமுகமாகவேனும் தாங்கள் ஒப்புக்கொண்டமைக்கு நன்றி. என்னுடைய நாலாவது கதை பிரசுரமாகும்போது உண்டாகும் சந்தோஷம், எனக்கு நீங்கள் அப்படி எழுதியிருந்ததைப் படித்தபோது உண்டாயிற்று.

என் மனைவியைப் பற்றிக் கேட்டிருந்தீர்கள். ஒரு ரகசியம் உங்களுக்குச் சொல்கிறேன். எனக்கு இன்னும் கல்யாணம் ஆகவில்லை. சரத் சந்திரரின் தேவதாஸ் கதை படித்தது முதல் எனக்குப் பார்வதி என்ற பெயரில் அப்படி ஒரு பிரியம். எனக்கு வரும் மனைவியின் பெயர் வேறு பெயராக இருந்தாலும், அதை நான் பார்வதியாகவே பண்ணிக் கொண்டு விடுவேன். அது பார்வதியாகவே இருந்து விட்டால்...

அதற்கு முன்னோடியாகத்தான் பார்வதி விசுவநாதன் என்ற என்னுடைய புனைபெயர்.

---

பஞ்சாப் பத்திரிகையில் ஒரு விளம்பரம் - (மணமகள் தேவை பகுதியில்)

'விவசாயி, வயது 35 திருமணம் செய்து கொள்ள விருப்பம். சொந்தமாக 'டிராக்டர்' உள்ளவர்கள் டிராக்டரின் கலர் புகைப்படத்துடன் தொடர்பு கொள்ளவும். தபால் பெட்டி எண்.......

எஸ். சந்திரசேகர்



கொஞ்ச நாட்களாகவே கதைகள் எதுவும் திரும்பி வரக் காணோமே, எழுதுவதை நிறுத்தி விட்டீர்களா?

பழைய கதைகள் எல்லாம் இன்னமும் தங்கள் வருகைக்காக என்னிடம் காத்துக் கொண்டிருக்கின்றன.

அன்பன், விசுவநாதன்

திரு விசுவ....

என்னவோ தெரியவில்லை, வர வர உங்கள் பெயரை எழுதக் கூச்சமாக இருக்கிறது. இப்பொழுதெல்லாம் கதை எழுத நேரம் எங்கிருக்கிறது, கடிதம் எழுதத்தான் சரியாக இருக்கிறது. என் அப்பாவிடம் நேற்றுச் சொல்லிவிட்டேன். (தூக்கி வாரிப் போட வேண்டாம்) நாம் இரண்டு பேரும் ஒரே பெயரில் எழுதுவதால் உண்டாகும் குழப்பத்தைப் பற்றி. அவர் ஒரு யோசனை சொன்னார். பிரமாதமான யோசனை. என்ன இருந்தாலும் அவர் அந்த நாளில் இரண்டு மூன்று பத்திரிகைகள் நடத்தியவர் அல்லவா? (அதிர்ச்சி அடைய வேண்டாம். அத்தனையும் கையெழுத்துப் பத்திரிகைகள்தான்).

அவர் யோசனை இதுதான். உங்களுடைய கதைகள் எல்லாவற்றிலும் ஆரம்பம் பிரமாதமாக இருக்கிறதாம். என்னுடைய கதைகளில் முடிவு பிரமாதமாக இருக்கிறதாம். ஆகையால் இருவரும் சேர்ந்து ஆளுக்குப் பாதியாக எழுதினால்....

அப்படிச் சேருவதற்குள் ஒரு விவரம் சொல்லி விடுகிறேன். எனக்கு அப்பா மட்டும்தான். அவருக்கு அதிகம் செய்யக் கூடிய வசதி இல்லை. ஆகவே அதிகம் எதிர்பாராத மாப்பிள்.... போங்கள் எனக்கு இதற்கு மேல் எழுத வரவில்லை.

அன்புடன், பார்வதி

அன்புள்ள பார்வதி,

உன் அப்பாவின் யோசனையைப் போஸ்ட்மேனிடம் சொன்னேன். ஸ்கைலாப் மாதிரி துள்ளிக் குதித்தார். அவ்வளவு சந்தோஷமாம். யாரிடம் திரும்பிவரும் எந்தக் கதையைத் தருவது என்ற குழப்பம் அவருக்கு தீர்ந்ததல்லவா? மகாலிங்க சுவாமியின் கருணையை மனமாரப் பாராட்டினார். உன் அப்பாவையும் நான். நான் எதையும் உங்களிடம் எதிர்பார்க்கவில்லை.

அப்பா அம்மாவுக்கு ஒரே பிள்ளை. திருச்சியில் ஒரு வீடு. கிராமத்தில் நிலம், பத்து மாதமாக இந்த ஊர் பாங்கில் வேலை. எனக்கு எந்தக் குறையும் இல்லை, நீ அருகில் இல்லையே என்பதைத் தவிர!

பாக்கி விஷயங்கள் நான் எழுதித் திரும்பி வந்து, உன்னிடம் அடைக்கலம் புகுந்துள்ள 'வரதட்சணையே உன்னால் வாழ முடியுமா?' என்ற சிறுகதையைப் படித்து உணர்க.

அன்பே ஒரு விண்ணப்பம். இன்று மாலை ஆறு மணிக்கு மூகாம்பாள் சன்னிதியில் உன்னை எதிர்பார்க்கிறேன். நம் பிரார்த்தனை பலித்ததற்காக அவளுக்கு நன்றி சொல்ல,

இருவரும் ஒருவராக
பார்வதி விசுவநாதன்

# SPORTS PICTURE PAGE




பன்னிரண்டு வருஷங்களுக்கு முன்பு முதன்முதலில் கராத்தே பள்ளியை நிறுவி, போலீஸார், மாணவர், பெண்மணிகள், அனைவருக்கும் கராத்தே கற்றுக் கொடுக்க முன் வந்தவர் ஆர். வி. டி. மணி. முதலில் கராத்தேயில் ஷிஹான் என்ற பட்டம் பெற்றவர். பின்னர் சர்வதேச மாஸ்டர் பட்டமாகிய 'ரென்ஷி'யை 1977-ல் அடைந்தார். ஜப்பானுக்குச் சென்று பயிற்சி பெற்றவர். சேத்துப்பட்டில் இவர் கராத்தே பள்ளி நடத்திச் சிறுவர் பெரியவர் அனைவருக்கும் கராத்தே கற்றுக் கொடுக்கிறார். படத்தில் மேலே உள்ள தலை மணியுடையது!

புகைப்பட நிபுணர் உத்ரா கூறுகிறார்: ''கராத்தே ஆக்ஷனை ஒரு குறிப்பிட்ட இடத்தில் 'போகஸ்' செய்து எடுக்க இயலாது. ஏனெனில் கராத்தே வீரர்கள் சண்டையில் கணத்துக்குக் கணம் ஒரோர் இடமாக நகர்ந்து கொண்டிருப்பார்கள். 15 அடி தூரத்தில் நின்று இந்தக் கராத்தே' 'போரை' எடுத்தேன். Aperture 'கட்' செய்து எடுத்தால்தான் Depth of field கிடைக்கும். போகஸ் முன்னே பின்னே இருந்தால் கூட படம் depth of Focus நன்கு கிடைக்கும். 1/500, 11–16, 400 ASA.

படம்: உத்ரா - விளக்கம்: குண்டுமணி



# திருமலை - திருப்பதி தேவஸ்தானம் திருப்பதி

திருமலை வெங்கடேசப் பெருமானுக்கு
ஆண்டுதோறும் நடக்கும்

## பிரம்மோத்ஸவம்

**1979 செப்டம்பர் 23-ம் தேதி முதல் அக்டோபர் 1-ம் தேதி வரை**

வருடம் தோறும் ஒன்பது நாட்கள் விமரிசையுடன் நடக்கும் பிரும்மோத்ஸவ வைபவம் பிரம்மதேவனாலேயே ஆரம்பித்து வைக்கப் பட்டது என்பது ஐதிகம். பலவகை வேத விற்பன்னர்கள், சாஸ் திரங்களிலும், புராணங்களிலும் கரைகண்ட வல்லுனர்களும், கலை கலாச்சாரங்களில் தேர்ந்த வித்வான்களும் கலைஞர்களும் வெங்கடேசப் பெருமானுக்கு அஞ்சலி செலுத்த இத்தருணத்தில் திருமலையில் வந்து கூடுவார்கள். இதுமட்டுமல்லாமல் இந்த மகத்தான வேளையின் கோலாகலத்தையும் கண்கொள்ளாக் காட்சியையும் வேதகோஷங் களையும், சாஸ்திரீய சங்கீதத்தையும், பஜனைகளையும் கண்டு மகிழக் கடவுளர்களே திருமலைக்கு வருகைபுரிகிறார்கள்.

வெங்கடேசப் பெருமானின் பெருமையை விளக்கும் வகையில் ஒவ்வொரு நாளும் காலையிலும் மாலையிலும் வெவ்வேறுவிதமான வாஹனங்களில் எம்பிரானை இருத்தி உலா விடப்படும்.

உத்ஸவத்தின் முக்கியமான நாட்கள் பின்வருமாறு :

| | | |
|---|---|---|
| **வியாழன்** | **செப்டம்பர் 27** | **கருடசேவை** |
| **ஞாயிறு** | **செப்டம்பர் 30** | **திருத்தேர் (ரதோத்ஸவம்)** |
| **திங்கள்** | **அக்டோபர் 1** | **சக்ரஸ்நானம்** |

இந்த உத்ஸவத்தில் பக்தர்களும் பங்கு பெறலாம். ரூ. 750/- க்கான டிக்கெட்டில் ஆறுபேருக்கு ஆனந்தசேவை அளிக்கப்படும். மற்றும் உள்ள ஆர்ஜித வாஹனங்களுக்கும் அவற்றுக்குறிய குறிப்பிட்ட காணிக்கையைச் செலுத்தியும் பங்கு கொள்ளலாம்.

**எக்ஸிக்யூடிவ் ஆபீசர்**
**திருமலை திருப்பதி தேவஸ்தானம், திருப்பதி**

# நையாண்டி மேளம்

ஆடிக் கிருத்திகை விழா சமயம் —

நுங்கம்பாக்கம் சத்சங்கத்தினர் ஏற்பாட்டில் கந்தபெருமானை தரிசிக்க விரதம் பூண்டு பால்காவடி, புஷ்பக் காவடி, பால்குடம் ஏந்திச் செல்லும் பக்தகோடிகள் இறையுணர்வில் தம்மை மறந்து ஆடியபடி செல்லும் வீதியுலா. கரக, காவடி ஆட்டத்துக்கு முன்னே 'நையாண்டி மேளம்' வாசித்தபடி சென்று கொண்டிருந்தனர் தென்காசி தேவேந்திர மேளம் ஏ. கருப்பையா அண்ணாவி குழுவினர்.

மறுநாள் 'நையாண்டி மேளம்' சம்பந்தப்பட்ட விவரங்களைத்' தெரிந்து கொள்வதற்காக்கருப்பையா அண்ணாவியைச் சந்தித்தேன்.

அவர் சொன்ன தகவல்கள்:

''நையாண்டி மேளம் என்பது முதன்முதவில் திருநெல்வேலி மாவட்டத்தில்தான் தோன்றியது. சுமார் ஐம்பது வருடங்களுக்கு முன்பு முதன் முதலாக நையாண்டி மேளத்தை வாசித்தவர் அம்பாசமுத்திரம் மடார் குளத்தைச் சேர்ந்த கோபால் அண்ணாவி அவர்கள்தான்.

ராஜமேளம் வாசிக்கும் எல்லா மேள வித்வான்களாலும் 'நையாண்டி மேளம்' வாசிக்க முடியாது. அதே நாதஸ்வரத்தில் தான் நையாண்டி மேளத்தை வாசித்தாலும் இதனை வாசிக்க ஆழ்ந்த பயிற்சி வேண்டும்.

இறைவன் வீதியுலா வரும் சமயங்களில் காவடி, கரகம் ஆடுவோருக்கு ஒரு விறுவிறுப்பை உண்டாக்கி இறையுணர்வில் ஆழ்ந்து போக உதவும் விதமாக இம்மேளம் வாசிக்கப்படுகிறது.



நையாண்டி மேளம் நின்றபடியோ, நடந்தபடியோ வாசிக்கப்படுகிறது. வாசிப்பவர்கள் மேளவாசிப்பின் விறுவிறுப்பில் தம்மையும் ஆட்படுத்திக் கொண்டு குதித்துக் குதித்து ஏதோ நையாண்டி செய்வது போல் தோற்றமளிக்கும் வகையில் இதனை வாசிப்பதால் 'நையாண்டி மேளம்' என்ற பெயர் தோன்றியது. ஆனால் சமீப காலத்தில் காரைக்குடி செட்டிமார்கள் ஒன்று சேர்ந்து 'நையாண்டி மேளம்' என்ற பெயர் ஏதோ கேலி செய்வது போன்று இருப்பதால் இதற்குத் தேவேந்திர மேளம் என்று பெயர் சூட்டியுள்ளனர்.

இரண்டு நாதஸ்வர வித்வான்கள், இரண்டு தவில்கள், இரண்டு பம்பைகள், ஒரு சுருதி, ஒரு தாளம் உட்பட 'நையாண்டி மேளம்' வாசிக்க எட்டு பேர்கள் அவசியம். இதைப் பம்பை என்று கூட சொல்லுவார்கள்.

எங்கள் பார்ட்டி உட்படத் தற்போது நையாண்டி மேளத்தில், தேர்ச்சி பெற்ற பார்ட்டிகள் மூன்று நான்கிற்கு மேல் கிடையாது.

என்னுடைய பால்ய வயதில் பெண் வேடம் போட்டுக் கொண்டு நையாண்டி மேளம் வாசிப்பேன்.

உலகத் தமிழ் மகாநாடு, அரசின் குடியரசு தின விழாக்கள், 'கொஞ்சும் சலங்கை' உட்பட சில படங்கள் ஆகியவற்றில் எங்கள் குழு நையாண்டி மேளம் வாசித்துள்ளது.

பேட்டி: நாவகன்
புகைப்படம்: எஸ். ராமன்



# காலனை வென்றவர்

பஞ்ச பாண்டவர்களில் தருமன் அர்ஜுனன், பீமன் ஆகியோரின் சிறப்புக்கள் பற்றித்தான் அதிகமாக அறிந்திருக்கிறோம். நகுலனும் சகாதேவனும் அவர்களுக்குச் சற்றும் சளைத்தவர்கள் அல்ல. மிக உன்னதமானவர்கள். சகாதேவன் பற்றி ஒரு கதை உண்டு.

ஒரு நாள் மாலை ஓர் ஏழை தரும புத்திரனிடம் வந்து ஏதோ சத் காரியத்துக்காக உதவி கேட்டான். தருமன் 'ஆகட்டும் செய்துவிடலாம். இப்போது மாலை மயங்கி விட்டது. நாளைக் காலையில் வாரும்' என்று கூறி அனுப்பினார்.

இதை அருகில் இருந்து பார்த்துக் கொண்டிருந்தான் சகாதேவன். தன் இல்லம் திரும்பினான். வெற்றி முரசு அறைபவர்களை அழைத்தான். ''வீதியெங்கும் வெற்றி முரசு முழங்கட்டும்'' என்று . ஆக்ஞாபித்தான்.

அவ்வளவுதான், முரசங்கள் அதிர்ந்தன. மக்கள், 'போர் ஏதும் நடக்கவில்லையே? வெற்றி முரசு கொட்டுவது எதற்காக?' என்று யோசித்தார்கள். தருமன் காதிலும் முரசொலி கேட்டது. அவர் அமைச்சரை அழைத்து விசாரித்தார். சகாதேவன் செய்த காரியம் என்று தெரிய வந்தது.

உடனே சகாதேவனை அழைத்து வரச் சொன்னார் தருமன். ''தம்பி! என்ன இது? வெற்றி முரசு கொட்ட உத்தர விட்டாயாமே?'' என்று வினவினார்.

''ஆம் அண்ணா'' என்றான் சகாதேவன்.

''எதற்கு? இப்போது போர் ஏதும் நடந்து நாம் ஜெயித்துவிடவில்லையே?''

''அண்ணா! என்ன இப்படிக் கேட்டு விட்டீர்கள்? நாம் பெரிய வெற்றி பெற்று விட்டோமே? காலனையே வென்றுவிட்டோமே!''

''என்ன! எமனை நாம் வென்றோமா? எப்போது? என்ன உளறுகிறாய் தம்பி?''

''உளறல் இல்லை அண்ணா! மாலையில் உங்களிடம் வந்த ஏழையிடம் என்ன சொல்லி அனுப்பினீர்கள்? நாளைக் காலையில் வா என்றீர்கள் அல்லவா?''

''ஆமாம், காலையில் தான தருமம் செய்கிறேன் என்று கூறித்தான் அனுப்பினேன்.''

''அதுதான் அண்ணா விஷயம். அப்படி நீங்கள் உறுதி அளித்து விட்டதால் நாளைக் காலை வரை நாம் மூவராவது எமனை வென்றுவிட்டோம் என்றுதானே அர்த்தம்? நாளைக் காலை நீங்கள் தானம் செய்யும் வரை அந்த ஏழையும் உயிருடன் இருக்க வேண்டும், நீங்களும் உயிருடன் இருந்தாக வேண்டும்; நீங்கள் தானம் செய்வதைப் பார்க்க நானும் உயிருடன் இருந்தாக வேண்டும்! ஆக, எமனை நாம் வென்றுதானே விட்டோம்!''

தருமன் அசந்து போய்விட்டார். அப்படியே சகாதேவனைக் கட்டி அணைத்துக் கொண்டார். கண்களில் நீர் மல்க, ''தம்பி, எனக்கு ஞானம் அருளினாய். நல்ல காரியம் ஒன்று செய்ய நினைத்தால் உடனே செய்ய வேண்டும். ஒத்திப்போடுவதானால் அந்த நல்ல காரியம் கடைசியில் நடைபெறாமலே கூடப் போய்விடலாம் என்று உணர்த்தினாய்'' என்றார்.

**உரையாடலினிடையில் சுவாமி அபேதானந்தா கூறிய ஒரு கதை**

Printed by V. Murali and published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd., at the Bharathan Press, Guindy, Madras - 600 032. Editor: K. Rajendran

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

இலங்கையில் விலை 75 சதம் (தபால் செலவு தனி)
மலேசியாவில் விலை (விமானப்பதிப்பு) 60 மலேயக் காசு

# உருவமோ சிறிது ஆற்றலோ பெரிது




நிப்போ ஹைப்பர்
பென்லைட் பேட்டரிகள்

IN/107/79

National

# நிப்போ

நீங்கள் நம்பி வாங்கிட நலமிகு சக்தி நிப்போ ஹைப்பர் பென்லைட் பேட்டரி. கால்குலேட்டர், ட்ரான்ஸிஸ்டர் ரேடியோ, ஹியரிங் எய்ட் போன்ற பல கருவிகளில் பயன்படுத்தப்படும் சக்தி மிகுந்த பேட்டரி நிப்போ-ஹைப்பர் பென்லைட் பேட்டரி.

ஜப்பானிய நேஷனல் நிறுவனத்தின் தொழில் நுட்பத்திறனுடன் கூடிய இண்டோ நேஷனல் தயாரிப்பு இது.

